ஸ்ரீ:

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்



ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்


மஹாமஹோபாத்யாய

ஸ்ரீகாஞ்சீ ப்ரதிவாதிபயங்கரம்

அண்ணங்கராசாரிய ஸ்வாமி


எண்பத்திரண்டாவது பிராயப்பூர்த்தியின் நினைவு மலராக

எழுதிய

# அபூர்வார்த்த ரத்னநிதி

(முதல் ரத்னம்)

உயிரெழுத்து வரிசையில் எண்பத்துநான்கு அபூர்வார்த்தங்கள்


சின்ன காஞ்சீபுரம் ஸ்ரீ காமாக்ஷி அச்சகத்தில் அச்சிடப்பட்டது

ஸ்ரீராமாநுஜன் அநுபந்தம்

1973

கிடைக்குமிடம்: க்ரந்தமாலா ஆபீஸ், காஞ்சீபுரம்-3.

பின் 631503

[விலை ரூபாய் ஒன்று

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# வாழ்நாளுள்ளவளவும் வழங்கும் விருந்து.

நம்மாழ்வார் பெரிய திருவந்தாதியில் "ஒன்றுண்டு செங்கண்மால்! யானுரைப்பது, உன்னடியார்க்கு என்செய்வனென்றே யிருத்தி நீ" என்றொரு பாசுர மருளிச் செய்துள்ளார். 'எம்பெருமானே! உனது திருக்கண் மலர்ச்சியை நோக்குங்கால் எனக்கொன்று சொல்லத்தோன்றுகின்றது' என்றார்; அதுகேட்ட எம்பெருமான் 'ஆழ்வீர்! சொல்லிக்காணீர்' என்ன, 'தேவரீர் அடியார்களுக்குச் செய்தருளாத உதவியில்லை; ஆயினும் இன்னமும் செய்யவேணும், இன்னமும் செய்யவேணும் என்றே பாரித்திருக்கின்றீர்' என்றார் ஆழ்வார். இதையடியேன் உபந்யாஸ கோஷ்டிகளில் பலகால் சொல்ல ப்ராப்தமாவதுண்டு. இதை யநுகரித்து அடியேன் இங்கொன்று விஜ்ஞாபிக்கிறேன். "உபந்யாஸக ஸௌபாக்யம்" என்கிற தலைப்பிலும் அந்தத் தலைப்பில்லாமலும் உலகம் சுவைத்துண்ணப் பற்பல நூல்களை யெழுதி வெளியிட்டிருக்கிறேனெனினும், உடலில் அசக்தி மீதூர்ந்தாலும் வாழ்நாளுள்ளவளவும் ஏதேனும் எழுதி வெளியிட்டுக்கொண்டே யிருக்க வேணுமென்கிற குதூஹலமே அதிகரிக்கின்றது. இவ்விதழில் வெளியிடத் தொடங்கி யிருக்கின்ற அபூர்வார்த்த ரத்னநிதி யென்கிற நூல் அந்த குதூஹலத்தினு லெழுந்தது. இந்நூலின் வைகரியை, முன்னுரையைச் சிறிது வாசித்துப் பார்த்து உணர்க. இந்த நூல் எப்போது முற்றுப்பெறுமென்பதை "மூதறிவாளர் முதல்வன்" என்று பெரியாழ்வார் போற்றநின்ற ஸர்வஜ்ஞனே யறிவன்.



உலகில் ஆஸ்திகர்கள் ஆதரிக்கும் நூல்கள் எத்தனை யுண்டோ, [ஆழ்வாராசாரியர்களினுடையவும் மஹர்ஷிகள் மஹாகவிகள் முதலானுநடையவும் நூல்கள்] அவையத்தனையிலுமுள்ள அர்த்த விசேஷங்கள் இந்நூலில் அடைவே வெளிவந்துகொண்டிருக்கும். ஞாபகங்கொண்டு அவரவர்கள் ஸமய விசேஷங்களில் மீண்டுமீண்டும் எடுத்துப் பார்ப்பதற்கு அநுகூலமாகவே இதில் அகராதிமுறை ஆதரிக்கப்பட்டது. (அ) தொடங்கி (ஔ) வரையிலுமுள்ள உயிரெழுத்துக்களால் மகுடமிட்டு நூறு அர்த்தவிசேஷங்கள்; (க) தொடங்கி (கௌ) வரையிலுமுள்ள மெய்யெழுத்துக்களால் மகுடமிட்டு நூறு அர்த்தங்கள். இப்படியே ச, ந, ப, ம முதலியவற்றிலும் திருப்பித் திருப்பித் தொடர்ந்துசெல்லும்.

உலகம்போற்றும் உயர்பதவியில்வாழும்

## உயர்திரு. (ஜஸ்டிஸ்)

# A. அழகிரிசாமி அவர்கள்



இப்பெரியார் நெடுநாள் சென்னை ஹைகோர்ட் ஜட்ஜ் பதவியில் அமர்ந்திருந்து இப்போது 4 மாத காலமாய் டில்லிமாநகரெனும் தலைநகரில் ஸுப்ரீம் கோர்ட் ஜட்ஜ் பதவியில் விளங்கி வருகிறாரென்பதை உலகமறியும். இப்பெரியார் நேற்று மார்கழித் திங்களில் சில நாட்கள் சென்னைமாநகர்க்கு விஜயஞ் செய்திருந்தபோது இவர்களோடு ஸம்பாஷிக்கும் பாக்கியம் வாய்த்தது. அப்போதுதான் இத்தகைய நூல் ஒன்று எழுதவேணுமென்கிற குதூகலம் விளைந்தது. ஆகவே இதனை இப்பெரியார்க்கு அர்ப்பணம் செய்கின்றேன். வாழி வாழி நீடூழி வாழி.

" தழைநல்லவின்பந்தலைப்பெய்து எங்குந் தழைக்கவே."

இப்படிக்கு,

P. B. அண்ணங்கராசாரியர்.

---

குறிப்பு:—இதேபோல் வடமொழியில் ஸ்ரீ ராமாயண ஸ்ரீ பாகவத ஸ்ரீ விஷ்ணு புராண பகவத்கீதாதிகளிலிருந்தும் பூர்வாசார்ய திவ்யஸூக்திகளிலிருந்தும் அகராதி க்ரமமாகவே ப்ரமாணவசனங்களையிட்டு விசேஷார்த்தங்களை விளக்கிவருகின்றேன். அதற்கு அத்புதார்த்த மஹார்ணவம் என்று பெயர். அது அடியேனுடைய வைதிக மநோஹரா பத்ரிகா மூலமாக வெளிவந்துகொண்டிருக்கும். அதன் ப்ரக்ரியையையும் இங்குச் சிறிது காட்டுகிறேன்;— அங்கே பரதமாரோப்ய—அக்ரதஸ்தே கமிஷ்யாமி—அக்ரத: ப்ராயெளராம:—அஹமஸ்யாவரோ ப்ராதா—அஹம் வோ பாந்தவோ ஜாத:—ஆருரோஹ ரதம் ஹ்ருஷ்ட:-ஆஸாஸம் த்வஹமிச்சாமி—இதம் தே நாதபஸ்காய—உத்தரம் தீர மாஸாத்ய—ஊர்த்வம் மாஸாந் ந ஜீவிஷ்யே —ருணம் ப்ரவ்ருத்த மிவ மே—ஏஷ நாராயண ஸ்ரீமாந்—ஐச்வர்யம் யாபி லோகாநாம்—இந்த வகையில் தாத்பர்ய விவரணங்கள் வெளிவந்துகொண்டிருக்கின்றன.

ஸ்ரீ:

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்
ஆழ்வாரெம்பெருமானுர் ஜீயர் திருவடிகளே சரணம்

ஸ்ரீ காஞ்சீ பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியர்

தமது எண்பத்திரண்டாம் பிராயநிறைவின் நினைவுமலராக எழுதிய

# அபூர்வார்த்த ரத்னநிதி

## வெண்பாக்கள்

எண்பத் திரண்டு பிராயத் திறுதிதனில்
நண்பர்கள் நன்குகந்து நாக்கொள்ளப்—பண்புடனே
இந்நூ லெழுத வெழுகின்றேன், என்னுடைய
எந்நூலு மீதொவ்வா தே.

(கருத்து.) அடியேனுக்கு எண்பத்திரண்டாம் பிராயம் நிரம்புமித்தருணத்தில் அபூர்வார்த்த ரத்னநிதியென்னுமிந்நூலை யெழுதத் தொடங்குகின்றேன். பலநூற்றுக் கணக்கான எனது நூல்களில் இந்நூலுக்கு நிகரான நூல் வேறில்லை யென்பது எனது அபிமானம். [வேதாந்த தேசிகன் தமது தயாசதகத்தின் முடிவில் அருளிய ''காமம் ஸந்து'' என்கிற சுலோக ரத்னத்தின் சாயையிலே இது விஜ்ஞாபித்தபடி. இதனைச் செருக்கு மொழியாகக் கொள்ளலாகாது.]

அகராதி யாம்முறையில் அர்த்தங்க ளெல்லாம்
நிகராது மின்றி நிறைத்துப்—பகர்கின்றேன்
என்னுடைய வாழ்நாள் முழுவதிலு மித்தகைய
தொன்னெறியில் செல்வேன் துணிந்து.

(கருத்து) இந்நூலில், வெளியிடக் கருதிய அர்த்தங்களின் மகுடங்களை அகராதி முறையில் அமைத்து விவரிக்கின்றேன். இந்நூல் என்னுடைய வாழ்நாளில் பலகாலம் நீடித்துச் செல்லவேண்டும் என்பது என் அவா. அதாவது—ஆயுச்சேஷமுள்ளவரையில் இவ்வகையாக எழுதிக்கொண்டு போவேன் என்றபடி.

நூறுபொருள் கொண்ட நூற்கள் பலபலவும்
தேறுமெனக் கொண்மின்கள் தெள்ளியீர்—வேறுபல
நூல்களையும் நுண்மதியோர் வேட்பநுவல் வேனெனினும்
நூலிதுவே நீண்டுவரு நூல்.

(கருத்து) இங்ஙனே நூறு நூருன அர்த்தங்களைக்கொண்ட நூல்கள் அகராதி முறையிலமைந்த மகுடங்களுடன் அபூர்வார்த்த ரத்னநிதி என்கிற பெயரிலேயே அடுத்தடுத்து வெளிவருமெனினும் இடையிடையே ஸமயோசிதமாக வேறு நூல்களும் வெளிவந்து கொண்டிருக்கும். இந்த அபூர்வார்த்த ரத்னநிதி என்கிற நூல் நீண்டகாலம் தொடர்ச்சியாக வரும்.

அவ்வில் தொடக்கமாய் வையில் முடிவுபெற்
றெவ்வொருநூ லோங்கி யொளிருமால்—இவ்வகையால்
எத்தனை நூ லிங்குதிக்கு மென்பதனை யெம்பெருமான்
சித்த மறியும் சிறந்து.

(கருத்து) (அ) என்னும் எழுத்து முதலாக (வை) என்னுமெழுத்தீருக மகுடங்களை யிட்டுச் சேகரிக்கும் நூல் இத்தனை என்கிற கணக்கிலே நில்லாது அடைவே சென்று கொண்டிருக்கும். இப்படி எத்தனை நூல் தொடர்ந்து செல்லுமென்பதை எம்பெருமான் திருவுள்ளமே யறியும்.

ஆழ்வார்க ளாரியர்கள் ஆதரிக்கத் தக்கவர்கள்
ஏழ்பாரு முய்ய வினிதுரைத்த—வாழ்வான
பன்னூல் களிலுறையும் பாங்கான பல்பொருளை
இந்நூ லெடுத்துரைக்கு மீண்டு.

(கருத்து) ஸ்ரீபராங்குச பரகாலாதிகளான ஆழ்வார்களும் ஸ்ரீமந் நாதமுனிகள் தொடங்கி மணவாளமாமுனிகளீருன ஆசார்யர்களும், கம்பர், பிள்ளைப் பெருமாள் ஐயங்கார் முதலான மகாகவிகளும் உலகம் வாழ உரைத்த நூல்களிலுள்ள அரும்பெரும் பொருள்கள் இந்நூலில் வெளிவருமென்க.

இந்நூலி லில்லாத இன்ப மிகுபொருள்கள்
எந்நூ லிலுமில்லை யென்றுரைக்க—இந்நூலில்
எல்லாப் பொருள்களையு மேற்றுகின்றே னெஞ்ஞான்றும்
வல்லார் மகிழ்ந்துணர்வர் வாய்ந்து.

(ச்லோகம்) யதிஹாஸ்தி ததந்யத்ர யந்நேஹாஸ்தி ந தத் க்வசித்,
இத்யுக்தியோக்யா ஸைஷா மே க்ருதிச் சிரமுதேஷ்யதி.

(கருத்து) வடமொழியில் ஒரு பெரிய நூலைப்பற்றி "யதிஹாஸ்தி ததந்யத்ர யந்நேஹாஸ்தி ந தத் க்வசித்" என்றெரு பழமொழியுண்டு. அதே போல அபூர்வார்த்த ரத்னநிதி யென்னுமிந்நூலில் இல்லாத பொருள் வேறு எதிலுமில்லை யென்னும்படியாக இதனை அமைக்கின்றேனென்க.

முன்னுரை முற்றிற்று.

**நாம் உபந்யாஸக ஸௌபாக்ய மென்று பெயரிட்டு எழுதிவரும் நூல்களில் இது தலையானது.**

(அ) என்னுமோரெழுத்தையே மகுடமாகக் கொள்ளும் விஷயங்கள் பல நூற்றுக்கணக்காக விருந்தாலும், இப்படி ஒவ்வொரெழுத்தையும் மகுடமாகக் கொள்ளும் விஷயங்கள் அபரிமிதமாக விருந்தாலும் ஒரேயிடத்தில் எல்லாவற்றையும் கொட்டிவிடாமல் மேன்மேலும் பல பகுதிகளுக்கு விஷயங்கள் வைத்துக் கொள்ளப்படுகின்றன. இதே போல வடமொழியிலு மெழுதுகின்றேன்.

ஸ்ரீரஸ்து

அருளிச்செயல் ரத்னநிதி நூல் தொடக்கம்

காப்பு;— வரவர முனியடி வணங்கும் வைதிகர்
திருவடி யிணைகளென் சிரமேற் சேர்கவே.

## 1 அக்காரக்கனியை யடைந்துய்ந்து போனேனே.

அக்காரக்கனி என்பது எம்பெருமானுக்குப் பொதுப் பெயராகவும் ஒரு திவ்ய தேசத் தெம்பெருமானுக்குச் சிறப்புப் பெயராகவும் திவ்யப்ரபந்தங்களில் காண்கிறது. திருவாய்மொழியில் (2-9) எம்மாவீட்டுப் பதிகத்தில் எக்காலத்தெந்தையாய் என்கிற பாட்டில் ''மிக்கார் வேதவிமலர் விழுங்கும் என் அக்காரக் கனியே!'' என்றவிடம் எம்பெருமானுக்குப் பொதுப் பெயராகவுள்ளது. திருமங்கையாழ்வாருடைய பெரிய திருமொழியில் (8-9) கைம்மான மதயானைப் பதிகத்தில்(4) ''தக்கானைக் கடிகைத் தடங்குன்றின் மிசையிருந்த அக்காரக் கனியை அடைந்துய்ந்து போனேனே'' என்றவிடத்து அக்காரக்கனி என்பது ஒரு திவ்யதேசத் தெம்பெருமானுக்குச் சிறப்புப் பெயராகவுள்ளது. அதாவது கடிகைத்தடங்குன்றென்பதனால் கடிகாசலமென்று ப்ரஸித்தமான சோளஸிம்ஹபுரத்தைச் சொன்னபடி. அவ்விடத்தெம்பெருமானுக்கு அக்காரக் கனி என்பது சிறப்பான திருநாமம். ''தூங்குதண் பலவின் கனி தொகுவாழையின் கனியொடு மாங்கனி'' என்னுமாபோலே அக்காரக்கனி என்றொரு கனியுள்ளதா என்று பலர் கேட்பதுண்டு. உண்மையான பொருள் யாதெனில்; அக்காரம் என்று கருப்பஞ் சாற்றுக்குப் பெயர். அதனைச் செடியின் ஸ்தானத்திலே வைத்து அதில் நின்றும் ஒருகனி தோன்றினால் அது எவ்வளவு மதுரமாயிருக்குமோ அவ்வளவு மதுரமானவன் எம்பெருமான் என்று எம்பெருமானுடைய மாதுர்யாதிசயத்தை ஆழ்வார்கள் ரஸித்துச் சொன்னபடி. வேதமானது ''யதா ஸைந்தவ கன:'' என்று எம்பெருமானுக்கு உப்புக் கட்டியை உவமையாக ஓதிற்று. ஆழ்வார்கள் ''எனக்குத் தேனே பாலே கன்னலேயமுதே'' என்று அநுபவிக்கும் பரம ரஸிகர்களாதலால் ''கடன்மல்லைக்கிடந்த கரும்பே'' என்றும் ''திருமாலிருஞ் சோலையங் கட்டியை'' என்றும், ''கரும்பீன்ற இன்சாற்றை'' என்றும் சொல்லுமா போலே அக்காரக்கனி என்றே எம்பெருமானுக்குத் திருநாமமிட்டார்கள். நம்மாழ்வார் திருவாய்மொழியில் (8-8-2) ''கடிசேர் நாற்றத்துள்ளாலை இன்பத்துன்பக் கழி நேர்மை ஒடியாவின்பப் பெருமையோன்'' என்றருளிச் செய்ததை இங்கு இணக்கிக்கொண்டநுபவிப்பது. அவ்விடத்து நமது திவ்யார்த்த தீபிகையுரை காண்க.

## 2. அஞ்சுகுடிக்கொருசந்ததியாய்

மணவாள மாமுனிகள் உபதேசரத்தினமாலையில் ஆண்டாளைக் குறித்தருளிச் செய்த பாசுரங்கள் மூன்றில் ஈற்றுப் பாசுரத்தின் தொடக்கமிது. சூடிக்கொடுத்த நாச்சியாரை அஞ்சுகுடிக்கொரு சந்ததி என்கிறார். இது சிலேடையில் அமைந்தது. அஞ்சுகுடி என்பதில் அஞ்சு என்பது 'ஐந்து' என்பதன் போலியாகவும், (பயப்படுகை

என்ற பொருளில் வந்த) ஒரு வினைப்பகுதியாகவும் கொள்ளத்தக்கது. முதற் பொருளில் ஆண்டாள் ஐந்து குடும்பங்களுக்கு ஒரு புதல்வியாகத் தோன்றினவள் என்பது போதரும். அதாவது, (1) பொய்கையார், பூதத்தார், பேயார் என்கிற மூவரும் ஒரு குடி. அதாவது அயோநிஜக்குடி. (2) திருமழிசைப்பிரான் பிரம்பன் குடி. (3) நம்மாழ்வார் காரியார்குடி. (4) குலசேகராழ்வார் சேரன்குடி. (5) பெரியாழ்வார் வேயர்குடி. ஆக இந்த ஐந்து குடிகட்கும் ஒரு சந்ததியாகத் தோன்றினவள் ஆண்டாள் என்பது விவக்ஷிதம். இந்த ஐந்து குடிகள் மட்டுமன்றிக்கே ஆழ்வார்கள் பதின்மர்க்கும் இவள்தானே ஒரு சந்ததியாதலால் அந்தப் பொருளும் இதில் காணக் கிடைக்கும். எங்ஙனே யென்னில்; அஞ்சுகுடி என்பதற்கு அஞ்சுகின்ற குடி என்று பொருள். எம்பெருமானுக்கு என் வருமோ என்று அஞ்சுதல் (மங்களாசாஸன பரதை) பெரியாழ்வார்க்கு விசேஷித்திருந்தாலும், ஆழ்வார்கள் பதின்மர்க்கும் இது ஸாதாரண தர்மமாகையாலே ஆழ்வார்கள் பதின்மருடைய குடியும் அஞ்சுகுடியாகும். அஞ்சுகின்றகுடி என்றவாறு. ஆக, முதற்பொருளில் ஐந்து குடும்பங்களுக்கு ஒரு ஸந்ததி என்றும், இரண்டாம் பொருளில் ஆழ்வார்கள் பதின்மர்க்கும் இவள் ஒரு ஸந்ததி என்பதும் தெரிவிக்கப்பட்டதாயிற்று.

## 3. அத்தூதனப்பூச்சி காட்டுகின்றான்

பெரியாழ்வார் திருமொழியில் இரண்டாம்பத்தின் முதற்பதிகம் மெச்சூது சங்கமிடத்தான் என்பது. அதில் பாட்டுத்தோறும் ஈற்றடி "அப்பூச்சி காட்டுகின்றான் அம்மனேயப்பூச்சி காட்டுகின்றான்" என வருவது. நிகமனப் பாசுரத்தில் "சொல்லார்ந்தவப்பூச்சிப் பாடலிவைபத்தும்" என்றருளிச் செய்ததும் காணத்தக்கது. அப்பூச்சி காட்டுதலென்பதைப் பற்றி ரஸகனமான இதிஹாஸ மொன்று கேளீர். மணவாள மாமுனிகளின் வியாக்கியானத்தையடியொற்றி அடியேன் திவ்யார்த்த தீபிகையுரையில் எழுதியிருக்கும் பங்க்திகள் இவை. "இப்பாசுரத்தை நம்பெருமாள் ஸன்னிதியில் உடையவர் கோஷ்டியிலே உய்ந்த பிள்ளை என்பாரொரு அரையர் அபிநயிக்குமளவில் 'அத்தூதன்' என்னும்போது ஸ்ரீக்ருஷ்ணனையும், 'அப்பூச்சி' என்னும்போது கண் இமையை மடக்கிக்கொண்டு வருவதையும் காட்டி அபிநயிக்க, உடையவர் பின்னே எழுந்தருளியிருந்த எம்பார், தம் திருக்கைகளைத் திருத்தோள்களோடு சேர்த்துக்காட்ட, அரையரும் தாம் முன் அபிநயித்ததை விட்டு எம்பார் காட்டியது போலவே எம்பெருமான் திருத்தோள்களில் சங்கு சக்கரங்கள் தரித்துக் கொண்டிருப்பதை அபிநயிக்க, உடையவர் மிகவுமுகந்து, 'கோவிந்தப் பெருமாள்!, [எம்பார்] இருந்தீரோ' என்றாராம். இதனால் ஏற்படுவதாவது—தூதனாய்த் தன் ஸௌலப்யத்தை வெளியிட்டு 'நம்மிலே ஒருவன்' என்று இவ்வுலகத்தவர் கொள்ளும்படி யிருப்பவன் அவர்கள் அஞ்சும்படி சில காலங்களில் ஈச்வரத்வ சின்னங்களைக் காட்டுகிறானென்பது.

## 4. அல்லிக் கமலக் கண்ணனை

பட்டர் ஒருநாள் தம்முடைய கோஷ்டியிலிருந்த சிஷ்யர்களை நோக்கிப் பரீக்ஷைபோல கேள்வி கேட்டார். அதாவது, எம்பெருமானை ஓர் ஆய்ச்சி 'நீ எங்கள் கோஷ்டியில் புகலாகாது' என்று கதவடைத்துத் தள்ளினபோது அவனுடைய

திருக்கண்கள் எங்ஙனேயிருந்தன? (இது ஒரு கேள்வி.) மற்றொரு கேள்வியாவது. ''எம்பெருமானே! எமக்கு நீ வேண்டா. உன் அடியார்களே அமையும் என்ற போது அவன் திருக்கண்கள் எங்ஙனேயிருந்தன? ப்ரமாணபூர்வகமாகச் சொல்லுங்கள்'' என்று வினவியருளினர். சிஷ்யர்கள் யாவரும் நிலத்தைப் பார்ப்பவரும் வானத்தைப் பார்ப்பவருமாக இருந்தனர். அந்த கோஷ்டியில் எழுந்தருளியிருந்த நஞ்சீயர் மெல்லிய குரலுடன் ''அல்லிக் கமலக் கண்ணனாயிருந்தான்'' என்று விண்ணப்பஞ் செய்தார். அது கேட்ட பட்டர் விம்மல் பொருமலாகி ''ஏஷ ஸர்வஸ்வ பூதஸ் து பரிஷ்வங்கோ ஹநூமத:'' என்ற கணக்கிலே வாரியணைத்தார். இங்கு மருமம் என்னவென்றால், திருமங்கையாழ்வார் பெரிய திருமொழியில் (10-ூ) காதில் கடிப்பிட்டென்னும் பதிகத்தில் ஓர் ஆய்ச்சியின் ஊடலை அநுகரித்துப் பேசுகையில், கண்ணனை அவள் உள்ளே புகவொட்டாமல் தள்ளுவதாக வைத்து, நிகமனப் பாசுரத்தில் ''அல்லிக் கமலக் கண்ணனை அங்கோராய்ச்சி எல்லிப் பொழுதூடிய ஊடல் திறத்தை'' என்றருளிச் செய்துள்ளார். இதனால் கோபிகள் கண்ணபிரானைக் கதவடைத்துத் தள்ளும்போது அவன் முகவிகாஸம் அடைந்தானே யல்லது மனோவிகாரம் சிறிதும் அடைந்திலன் என்பது தெரியவரும். [அடுத்த விஷயம்] எம்பெருமானை நோக்கி, ''நீ வேண்டா; உன் அடியார்களே யமையும்'' என்றருளிச் செய்த பதிகம் திருவாய்மொழியில் (8—10) நெடுமாற்கடிமை யென்பது. அதிலும் நிகமனப் பாசுரத்தில் ''நல்ல கோட்பாட்டுலகங்கள் மூன்றினுள்ளும் தான் நிறைந்த அல்லிக் கமலக் கண்ணனை'' என்றுள்ளது. இதனால் எம்பெருமான் தன் அடியார்களிடத்து ஈடுபடுமவர்களைத் தன்னிடத்து ஈடுபடுமவர்களிற்காட்டிலும் மேம்பட்டவர்களாகக் கொண்டு முகவிகாஸம் அடைந்தான் என்பது தெரியவரும். (மற்றொரு கேள்வி.) கோபிகள் யசோதைப் பிராட்டியிடம் வந்து கண்ணன் செய்த தீம்புகளை முறையிட்டபோது கண்ணனுடைய திருக்கண்கள் எப்படியிருந்தன என்றும் ஒரு கேள்வி கேட்டார் பட்டர். அதற்கும் நஞ்சீயர் அப்போது ''அங்கமலக் கண்ணனாய் இருந்தான்'' என்று விடையிறுத்தார். பெரியாழ்வார் திருமொழியில் இரண்டாம் பத்தின் முடிவில் ஆற்றிலிருந்து பதிகத்தில் கோபிகள் யசோதைப்பிராட்டியிடம் கண்ணன் செய்த தீம்புகளைச் சொல்லி முறையிட்டு முடிக்கையில் ''அங்கமலக் கண்ணன் தன்னை அசோதைக்கு மங்கை நல்லார்கள் தாம் வந்து முறைப்பட்ட'' என்றுள்ள பாசுரத்தை உட்கொண்டு பணித்த விடை இது. நஞ்சீயர் நெடுநாள் அருளிச்செயல் வாஸனையேயில்லாதவராயிருந்து நெடுநாள் பழகினவர்கட்கும் நிலமல்லாத விஷயத்தில் தேர்ச்சி பெற்றது ஆசார்ய கடாக்ஷ விசேஷமத்தனை.

## 5. அஞ்சனவண்ணனை ஆயர்கோலக் கொழுந்தினை

கண்ணபிரானுடைய மாதாக்கள் இருவர். தேவகிப்பிராட்டி பெற்றதாய். யசோதைப் பிராட்டி வளர்த்த தாய். இவனை வயிற்றில் கொண்டு பெற்ற பாக்யவதியான தேவகிப் பிராட்டி, பெற்றவுடனே கண்ணனை இழந்தவளாதலால் ''ஒன்றுங் கண்டிடப் பெற்றிலேன்'' ''எல்லாம் தெய்வ நங்கை யசோதை பெற்றாளே'' என்றும் ''நந்தன் பெற்றனன் நல்வினையில்லா நங்கள் கோன் வசுதேவன் பெற்றிலனே'' என்றும் நெடுநாள் புலம்பிக்கொண்டே யிருந்தாள் என்பது ஏற்கும்.

குலசேகராழ்வார் தமது திருமொழியில் "எல்லையில் பிள்ளை செய்வன காணாத் தெய்வத் தேவகி புலம்பிய புலம்பல்" என்று ஒரு பதிகமிட்டதும் பொருந்தும். எல்லாம் பெற்றவளான யசோதைப் பிராட்டியும் நாடோறும் புலம்பினளென் பதைப் பெரியாழ்வார் திருமொழியில் ஒரு பதிகத்தினலறிகிறோம். அப்பதிகந்தான் "அஞ்சன வண்ணனை ஆயர் கோலக் கொழுந்தினை, மஞ்சனமாட்டி மனைகடோறுந் திரியாமே, கஞ்சனைக் காய்ந்த கழலடி நோவக் கன்றின் பின், என் செயப் பிள்ளையைப் போக்கினேன் எல்லே பாவமே" என்கிற பாட்டை முற்கொண்டது. என்று மெனக்கினியானை என் மணி வண்ணனைக் கன்றின்பின் போக்கினேனென்ற சோதை கழறிய பதிகமிது. இப்பதிகத்தினல் ஒரு விசேஷம் அறியக் கிடக்கின்றது. அதாவதென்னென்னில்; கண்ணன் மனைகள்தோறும் புகுந்து தீம்புகள் செய்ய, ஆய்ச்சிகள் அனைவரும் யசோதையிடம் வந்து முறைப்பட, அப்போது யசோதை "அசலகத்தார் பரிபவம் பேசத்தரிக்ககில்லேன் பாவியேனுக்கிங்கே போதராயே" என்று சொல்லிக் கண்ணனை சிக்ஷித்ததாகக் கீழே இரண்டாம்பத்தில் "வெண்ணெய் விழுங்கி" பதிகத்தாலறிகிறோம். இவ்வஞ்சன வண்ணன் பதிகத்தில் மனைகடோறும் தீம்புகள் செய்து திரியாமே காட்டுக்குப் போகவிட்டேனே என்று புலம்பும் முகத்தால் அவன் செய்த தீம்புகள் எல்லாம் தனக்குப் பரமபோக்கியமென்பதைக் காட்டியுளளாயிற்று. இதுகொண்டே ஆண்டாள் தனது திருமொழியில் "அஞ்சவுரப்பாள சோதை ஆணாட விட்டிட்டிருக்கும்" என்றனள்.

## 6. அஞ்சலோதியைக் கொண்டு நடமின்

திருமங்கையாழ்வார் பெரியதிருமொழியில் (10-2) "எஞ்சலிலிங்கைக் கிறை" என்கிற பாட்டில் "அஞ்சலோதியைக் கொண்டு நடமின் அஞ்சினோம் தடம் பொங்கத்தம்பொங்கோ" என்றுரைத்தார். இப்பதிகமானது ராக்ஷஸர்கள் பலரும் இராமபிரானை நோக்கி சரணகதி செய்வதாகவைத்துப் பாடியது. இதில், "பிரானே! பிராட்டியை நாங்கள் ஸமர்ப்பித்து விடுகிறோம். கொண்டு போங்கள்; எம்மை நலிய வேண்டா" என்று சொல்லுவதாக அமைக்கப்பட்டுள்ளது. இதில் பிராட்டியை அஞ்சலோதி என்றது. அதன் பொருளாவது—அஞ்சு அல் ஓதியை—ஓதி என்று கூந்தலுக்குப் பெயர். "ஐந்து" என்பது 'அஞ்சு' என மருவிக்கிடக்கிறது. மிருதுவாயிருத்தல், குளிர்ந்திருத்தல், நறுமணம் மிக்கிருத்தல், கறுத்திருத்தல் நீண்டிருத்தல் என உத்தமகேசலக்ஷணம் ஐவகைப்பட்டதாகும். அல் என்பது இரவுக்குப் பெயராகி இருளைக் குறிக்கின்றது. இருண்ட கூந்தல் என்றபடி. ஐவகை லக்ஷணங்களில் கறுத்திருத்தல் என்பது சேர்ந்தேயிருத்தலால் 'அல்' என்பது புநருக்தியாகுமேயென்னில் ஐவகையில் கறுத்திருத்தல் என்பதை நீக்கி அடர்ந்திருத்தல் என்பதைக் கூட்டிக்கொள்க. அல்லது கருமை விசேஷித்த லக்ஷணமாதலால் அதைத் தனிப்படவும் சொன்னது பொருந்தும். "மெத்தன்ன பஞ்ச சயனம்" என்ற திருப்பாவைப் பாசுரம் இங்கு நினைக்கத்தக்கது. 'அஞ்சலோதி' என்றது அன்மொழித்தொகை. இங்குச் சில விவாத விஷயங்கள் கேளீர். இராமநாதபுரத்தில் பிறந்து பலவாண்டுகள் சென்னையில் வாழ்ந்தவரும் தமிழ்ப் பண்டிதருமான மு. ராகவையங்கார் என்பவர் "அருளிச்செயற்பாட வகைதி" என்றொரு நூல் எழுதி அதை மதுரைச் செந்தமிழ்ப் பத்ரிகையில் வெளியிட்டு

வந்தார். அவர் குருகுலவாஸம் பண்ணுதவராகையால் பூர்வாசார்ய வ்யாக்யானங்களில் ஆதரமின்றிக்கே தம் மனம்போனபடியெல்லாம் திவ்ய ப்ரபந்தப் பாசுரங்களைத் திருத்தியும் மாறுபடுத்தியும் வந்தார். அப்போது அடியேன் "செந்தமிழாராய்ச்சி" என்னும் நூலை எழுதி வெளியிட்டு அவருடைய விச்வாமித்ர ஸ்ருஷ்டிகளை யெல்லாம் கண்டித்திருக்கிறேனென்பது உலகப்பிரசித்தம். இங்கு நாம் ப்ரஸ்தாவித்த 'அஞ்சலோதி' என்பதை அவர் 'அஞ்சிலோதி' என்று திருத்தினர். அம் சில் ஓதி என்று பதம் பிரித்து, 'இதுதான் தமிழர் வழக்கு' என்று ஏதேதோ எழுதினர். இஃது ஆழ்வார்கட்கு உடன்பாடன்று. திருவெழுகூற்றிருக்கையில் "ஐம்பாலோதியை ஆகத்திருத்தினை" என்றும், பெரிய திருமொழியில் (7-5-3). தேரழுந்தூர்ப்பதிகத்தில் "செம்பொன்மதிள் சூழ்" என்னும் மூன்றும் பாட்டில் "கொம்பிலார்ந்த மாதவிமேற் கோதி மேய்ந்த வண்டினங்கள் அம்பராவுங்கண் மடவார் ஐம்பாலணையும் அழுந்தூரே" என்றும் உள்ளது. இவ்விடங்களில் 'ஐம்பால்' என்றது ஐவகைக் குணங்களையுடைய கேசபாசம் என்றபடி. இதை யெல்லாம் நாம் எடுத்துக்காட்டி விளக்கின பிறகு அவ் வையங்கார் 'தெளிந்தேன், மருளொழிந்தேன்' என்றார்.

## 7. அழகியமணவாளச்சீயர்

ஸ்ரீ வைஷ்ணவ ஸம்ப்ரதாயத்தில் மணவாள மாமுனிகளுக்கு முன்னே வாதி கேஸரி அழகியமணவாளச் சீயர் என்பவர் ஒருவரிருந்தார். அவரைப் பற்றி உபதேச ரத்தினமாலையில் மூன்று பாசுரங்களில் ப்ரஸ்தாவமுள்ளது. (1) "பிள்ளான் நஞ்சீயர் பெரியவாச்சான்பிள்ளை. தெள்ளார் வடக்குத் திருவீதிப் பிள்ளை மணவாளயோகி திருவாய்மொழியைக் காத்த குணவாளரென்று நெஞ்சே கூறு" என்றதில் மணவாளயோகி என்றது அழகியமணவாளச் சீயரே யாவர். (2) "அன்போடழகிய மணவாளச் சீயர்" என்னும் பாசுரம். (3) "நஞ்சீயர் செய்த வியாக்கியைகள்...மன்னுமணவாள முனிசெய்யுமவை தாமுஞ்சில"-இப்பாசுரங்களுள் இடைப் பாசுரத்தில் 'அழகியமணவாளச்சீயர்...தம் பெரிய போதமுடன் மாறன் மறையின் பொருளுரைத்தது" என்று ஸாதித்திருப்பதில் ஒரு விசேஷமுண்டு. அவர் பூர்வாசார்யர்களிடம் காலக்ஷேபம் கேட்டவராயினும் சிற்சில விடங்களில் அவர்கள் வழியைப் பேணுமல் தாம் சுதந்திரமாகச் சில பொருள்களைக் கூறிவைத்திருப்பதுண்டு. அதை அவருடைய பன்னீராயிரப்படி உரையிலும் திருவிருத்த ஸ்வாபதேச வுரையிலும் காணலாம். நாமும் நம்முடைய திவ்யார்த்த தீபிகை யுரையில் பல விடங்களில் எடுத்துக் காட்டியிருக்கிறோம். இவரைப்பற்றி மணவாளமாமுனிகள், "தம் பெரிய போதமுடன்" என்று ஸாதித்தது இந்தச் சீயர் ஆசார்யாதீனமான ஞானத்தாலன்றிக்கே தம்முடைய சுதந்திரமான ஞானத்தினுல் உரைத்தது என்று காட்டவென்று பெரியோர் அருளிச்செய்வர்.

## 8. அழகிய மணவாளப் பெருமாள் நாயனர்

வடக்குத் திருவீதிப் பிள்ளையின் இளைய திருக்குமாரரும் பிள்ளை லோகாசார்யருடைய திருத்தம்பியாருமான இவ்வாசிரியரைக் கீழே குறித்த வாதிகேஸரி

அழகியமணவாளச் சீயராகவே சிலர் மருண்டிருப்பதுண்டு. அது தவறான நினைவு. அவர் உத்தமாச்ரமி. இவர் நைஷ்டிகப் ப்ரஹ்மசாரி. இவர் அருளிச்செய்த திவ்ய க்ரந்தங்கள் திருப்பாவைக்கு ஆறாயிரப்படி வ்யாக்யானம், கண்ணிநுண் சிறுத்தாம்பு வ்யாக்யானம், அமலனாதிபிரான் வ்யாக்யானம், ஆசார்யஹ்ருதயம், அருளிச்செயல் ரஹஸ்யம் முதலியன. இவற்றுள் ஆசார்யஹ்ருதயம் ஒப்புயவர்ற்ற உத்தமோத்தம க்ரந்தம். வேதம் போலவே இதுவும் மநுஷ்ய ப்ரணீதமன்றிக்கே ஸ்வயம் வ்யக்தமென்னவேண்டுமத்தனை.

## 9. அழகிய மணவாள நயினர்

மணவாளமாமுனிகளின் திருப்பேரனாரான இவ்வாசிரியர் அவிராமவராசார்யர் என்று ப்ரஸித்தி பெற்றவர். இவர் உத்தமோத்தம வித்வத் கவியாக விளங்கினவர் என்பது இவர் அருளிச்செய்த நக்ஷத்ரமாலிகையினால் கையிலங்கு நெல்லிக்கனியாக விளங்கும். அத்துதிநூலின் தனியனில் ''ஆசார்யபௌத்ரம் அபிராமவராபிதானம்'' என்றது காண்க. அந்த நக்ஷத்ரமாலிகையின் சொற்பொருள் நயங்களைப்பற்றித் தனியேபேசவேண்டும். மேலே பேசநேரும்.

## 10. அப்பொழுதைக்கப்பொழுதென்னாராவமுதமே

திருவாய்மொழியில் (2-5-4) *எப்பொருளுந்தானா யென்கிற பாட்டில் பின்னடியாகவுள்ளது இது. ஸம்ஸாரிகளான நாம் மிக்க விடாயுடன் தண்ணீர் பருகும்போதும், மிக்க பசியுடன் ப்ரஸாத முண்ணும்போதும் முன்பு பருகின தண்ணீராகவும் முன்பு உண்ட ப்ரஸாதமாகவும் நினையாதே அப்போதுதான் புதிதாக ஸ்வீகரிப்பதுபோல நினைக்கிறோம். எம்பெருமானுடைய அநுபவத்தில் நமக்கு இவ்வகையான தோற்றம் மேட்டுமடையாக வுள்ளது. ''கண்டு கேட்டுற்று மோந்துண்டுழலுமைங்கருவிகண்ட வின்பம்—ஒழிந்தேன்'' என்றிருக்குமாழ்வார்க்கு பகவத்விஷயாநுபவம் நித்யாபூர்வமா யிருக்கும். நாள் கணக்கிலும் மாதக்கணக்கிலும் வருஷக்கணக்கிலும் எம்பெருமானை யநுபவித்தாலுங்கூட க்ஷணேக்ஷணே நவம் நவமாய்த் தோற்றியிருக்கு மாழ்வார்களுக்கு. திருமங்கையாழ்வாருடைய திருக்கண்ணபுரப் பதிகத்தில் ''பண்டிவரைக் கண்டறிவதெவ்வூரில் யாமென்றே பயில்கின்றாளால்'' என்ற பாசுரத்தையும் இங்கே இணைக்கிக்கொள்க. (இங்கு ஓர் இதிஹாஸம் கேண்மின்.) சென்னைத் தொண்டமண்டலக் கலாசாலையில் பகவத் கதாப்ரஸங்க ஸபா மூலமாக நமது பகவத்விஷய ப்ரவசனம் நடைபெற்று வருகையில் பெரும்பாலும் விஜயஞ்செய்துகொண்டிருந்த கீர்த்தி மூர்த்தியான மஹாமஹோபாத்யாய உ.வே. சாமிநாதய்யரவர்கள் ''எப்பொழுதும் நாள் திங்களென்கிற இந்தப்பாசுரத்தைக் கேட்டவாறே உள் குழைந்து உருகி எழுந்து பேசினார்—''சபையோர்களே! நான் எத்தனையோ செய்யுள்கள் பார்த்திருக்கிறேன், பாடம் செய்துமிருக்கிறேன். இப்படியொரு பாடல் என்னே! என்னே! எப்பொழுதும்.........நாள் திங்கள்.........ஆண்டூழி.........ஊழிதொறும்.........அப்பொழுதைக்கப்பொழுது......என்னாராவமுதமே'' என்று பதம் பதமாகப் பிரித்துப் பிரித்து வாய்வெருவி அன்று சபையை அதிரச் செய்தார்.

## 11. அமுதிலுமாற்றவினியன்

திருவாய்மொழியில் (1-6-6) அமுதமமரர்கட்கீந்த வென்னும் பாட்டில் ''அமுதிலுமாற்ற வினியன்'' என்பது மூன்றுமடி. (இதைப்பற்றி ஓர் இதிஹாஸம்.) ஜகத்விக்க்யாதராய் வாழ்ந்திருந்த (பெடரல் கோர்ட்டு ஜட்ஜ் பதவியையும் வஹித்த) ஸ்ரீமான் உ. வே. ஸர். S. வரதாசாரியர் ஸ்வாமி ஒரு ஸமயம் ரைல் பயணம் செய்துகொண்டிருந்தபோது கையில் திவ்யப்ரபந்த மூல புத்தகம் வைத்துக்கொண்டு பார்த்து வந்தாராம். எதிர் ஸீட்டில் கிரிஸ்சியன் பாதிரியொருவர் உட்கார்ந்திருந்தவர் ''இது என்ன புத்தகம்?'' என்று கேட்டாராம்; ''எங்கள் ஆழ்வார்களின் திவ்வியப்பிரபந்தம் என்றூராம்'' அவர். இப்படித் தாருங்கள் என்று கேட்டுவாங்கிப் புத்தகத்தைப் பிரிக்கையில் ''அமுதிலுமாற்றவினியன்'' என்கிற பாசுரம் வந்ததாம்; அதை அப்பாதிரியார் பலகால் உரைத்துரைத்து ''இது பாடிய ஆழ்வார்க்குக் கடவுள் அமுதமாகத் தித்தித்திருந்தாலொழிய இங்ஙனே பாசுரம் பாடியிருக்கமுடியாது'' என்றூராம்.

## 12. அட்டபுயகரத்தேனென்றூரே

அருளிச்செயல்களில் ஆழ்வார்கள் திவ்யதேசங்களை அநுபவிக்கும் வகைகள் பலபடிப்பட்டவை. 'பிரிதி சென்றடை நெஞ்சே' 'சாளக்கிராமமடை நெஞ்சே' 'திருவேங்கடமடைநெஞ்சமே' 'வதரிவணங்குதுமே' 'நைமிசாரணியத்துளெந்தாய்' 'எவ்வுள் கிடந்தானே', 'திருவல்லிக்கேணிக்கண்டேனே' என்று இவ்வகையில் வருமவை அருளிச்செயல் கற்றூர் அறிந்தவையே. ஸ்ரீ காஞ்சியிலுள்ள அட்டபுயகரத்தை அநுபவிக்க இழிந்த திருமங்கை ஆழ்வார் பரமவிலக்ஷணமானதொரு நடையில் அநுபவிக்கு மழகு வாசாமகோசரம். பெரிய திருமொழி (2-8) திரிபுர மூன்றெரித்தானும் என்கிற பதிகம் பாசுரந்தோறும் ''அட்டபுயகரத்தேன் என்றூரே'' என்கிற முடிபைக் கொண்டது. இதன் அழகை விளக்குகிறேம். திருவிடவெந்தை விஷயமான கீழ்த் திருமொழியில், ஆழ்வார் தாமான தன்மையை யிழந்து பட்ட பாடுகளைத் திருவுள்ளம்பற்றின எம்பெருமான் 'இவ்வாழ்வாரை இப்படியோ நாம் துடிக்க விட்டோம்! தம் துடிப்பைத் தாமே முறையிட்டுக் கொள்ளும்படியாகவும் நாம் பிற்பட்டோமே' என்று முடிமேல் மோதிக்கொண்டு, அடியார்களுக்குத் தான் உதவின குணங்களையும் பரம விலக்ஷணமான வடிவழகையும் பிரகாசப்படுத்திக் கொண்டு திருவட்டபுயகரமென்னும் கச்சித்திருப்பதியிலே ஆழ்வார்க்குப் பரம போக்யமாக ஸேவை ஸாதித்தான்; ஆழ்வாரும் (கீழ்த் திருமொழியின் அநுபந்தமாகவே) பரகால நாயகியான நிலைமையிலேயே நின்று அப்பெருமானை ஸேவித்தார்; என்றைக்கும் எங்குங் கண்டறிய முடியாத திருக்கோலமா யிருந்தது; ''ஆழியொடும் பொன்ஞர் சார்ங்கமுடைய வடிகளை இன்னூரென்றறியேன்'' என்றூற்போலே அப்பெருமானை இன்னுனென்று அறியமாட்டிற்றிலர். அறிந்துகொள்ளாமலிருக்க மனமில்லை; ஸ்வபுத்தியாலே அறிந்துகொள்ளவும் முடியவில்லை. என்ன செய்வது? 'நீர் ஆர்?' என்று கேட்கலாம் என்று பார்த்தாலோ வாய் எழும்ப

வில்லை. முகத்தை நேரே பார்த்து வார்த்தை சொல்ல முடியாதபடி சோதி வெள்ளம் அலையெறிந்து தள்ளுகின்றது; அதனால், முகம் நோக்கி 'நீர் ஆர் ?' என்று கேட்கமாட்டிற்றிலர். இவர் நம்முடைய பர்த்தாவாகவே இருக்கக்கூடும் என்று நெஞ்சிலே ஒரு தோற்றமும் தோன்றினமையால் வெட்கத்தாலும் 'நீர் யார் ?' என்று கேட்கமாட்டிற்றிலர்; கேட்டுத் தெரிந்துகொள்ள விருப்பமோ அதிகரித்து விட்டது; அவர் தம்மையே நேரே முகம் பார்த்துக் கேளாமல் அருகிருந்தாரை நோக்கி, 'இப் பெரியவர் யார் கொல் ?' என்று கேட்க, அதற்கு எம்பெருமான் முனே 'நான் அட்டபுயகரத்தேன்' என்று மறுமொழி கூற, படுக்கைத் தலையில் இப்படிச் சில வார்த்தைகள் நடந்துகொண்டிருப்பதைப் பரகால நாயகியின் தாய் மார் தோழிமார் முதலானார் செவியுற்று, ''நங்காய் ! ஏதேனும் ப்ரமித்தாயோ ? இவை யென்ன வார்த்தைகள் ?'' என்று கேட்க, ''ப்ரமித்தேனல்லேன். ஒரு மஹா புருஷரை ஸேவிக்கப் பெற்றேன். 'அவரார் கொல் ?' என்று கேட்டேன். திருவட்ட புயகரத்து நாயனார், 'நான்தான் அட்டபுயகரத்தேன்' என்று உத்தர மருளிச் செய்கிறார் காண்மின்''—என்று பரகாலநாயகி தன் தாய்மார்க்கும் தோழிமார்க் கும் நடந்த வரலாறு சொல்லுவதாயிருக்கிறது இத்திருமொழி. இங்கு முக்கிய மாகக் குறிக்கொள்ளவேண்டிய விஷயங்கள் கேளீர். 'அட்டபுயகரத்தேன்'—அட்ட புயகரத்திலுள்ளவன் நான் என்று பொருள். 'அஷ்டபுஜன்' என்பது எம்பெருமா னுடைய திருநாமம்; எட்டுத் திருக்கைகளை யுடையவன் என்று பொருள். க்ருஹ மென்ற வடசொல் கரமெனத் திரியும்; ஆகவே, அஷ்டபுஜனுடைய க்ருஹம்— அட்டபுயகரம்; (திவ்ய தேசத்தைச் சொன்னபடி.) அவ்விடத்திலுள்ளவன் நான் என்றதாயிற்று. 'நான் அட்டபுயன்' என்றே எம்பெருமான் மறுமொழி கூறி யிருக்கலாமே; தலையைச்சுற்றி மூக்கைப் பிடிப்பதுபோல இங்ஙனே ஏதுக்குச் சொன்னான் ! என்று கேள்வி பிறக்கும்; கேண்மின்; 'நான் அட்டபுயன்' என்று சொல்லிக்கொண்டால் தன்னை எம்பெருமானாகத் தானே வெளியிட்டுக்கொண்ட தாக விளங்கிவிடும். அப்படி ஸ்பஷ்டமாகச் சொல்லிக்கொள்ள எம்பெருமானுக்குத் திருவுள்ளமில்லை. வேற்றுமனிதனாகப் பொய் சொல்லிக்கொள்ளவும் விருப்பமில்லை; ஆகவே, வெகு சாதுர்யமாகச் சொல்லிக்கொள்ளுகிறான் 'அட்டபுயகரத்தேன' என்று. 'அஷ்டபுஜ க்ஷேத்ரத்திற்கு நான் அதிபதி' என்றதாகவுமாம். 'அஷ்டபுஜ க்ஷேத்ரத்திலே கிடப்பானொருவன் நான்' என்று ஸாமாந்யமாகச் சொல்லிக்கொண்ட தாகவுமாம்.

துஷ்யந்த மஹாராஜன் வேட்டையாடிக்கொண்டே சகுந்தலையின் இருப் பிடத்தை அடைந்தபோது அவனின்னானென்று தெரிந்துகொள்ள விரும்பி 'நீயார்?' என்று கேட்டார்க்கு அரசன் விடை கூறும்போது ''பவதி ய: பௌரவேண ராஜ்ஞா தர்மாதிகாரே நியுக்த: ஸோஹம்'' (புருவம்சத்து அரசனாலே தரும காரியங்களைச் செய்யுமாறு நியமிக்கப்பட்டவன் நான்) என்று சாதுர்யமாக விடைகூறினது இங்கு நினைக்கத்தக்கது. புருவம்சத்து அரசனாகிய தன் தந்தையினால் நியமிக்கப்பட்ட அரசன்தான் என்றும், புருவம்சத்து ராஜாவுக்கு வேலைக்காரன் தான் என்றும் இருவகையாகப் பொருள்படுமாறு உரைத்தது காண்க. 'அட்டபுயவகரம்' என்பது அட்டபுயகரம் என மருவிற்றென்றலும் பொருந்தும்; அகரமாவது அக்ரஹாரம்.

## 13. அஞ்சனவண்ணனென்னுருயிர் நாயகனுளாமே

கம்பராமாயணத்தில் அயோத்தியா காண்டத்தில் குகப்படலத்துப் பாட்டிது. பரதாழ்வான் சக்ரவர்த்திக்கு ஈமக் கடன்களை முடித்து இராமபிரானை எப்படியாவது வனத்திலிருந்து மீட்டுக்கொண்டு வரவேணுமென்ற ஆவலுடன் அயோத்தியிலுள்ளாரெல்லாரையும் கூட்டிக்கொண்டு வருகையில் அதனைக்கண்ட குகன், அவனுடைய நல்ல எண்ணத்தைத் தெரிந்துகொள்ளாமல் அவன்மீது அதிசங்கை கொண்டானென்பதை வால்மீகி மிகவும் சுருக்கமாகக் கூறியுள்ளார். இவ்விஷயத்தைக் கம்பர் மிக விரிவுபடுத்தியுள்ளார். குகன் கூறியதாக வைத்த பாட்டுக்களில் இஃது ஒன்று. (அதாவது) "அஞ்சனவண்ணனென்னுருயிர் நாயகனுளாமே, வஞ்சனையாலரசெய்திய மைந்தரும் வந்தாரே, செஞ்சர மென்பன தீயுமிழ்கின்றன செல்லாவோ உஞ்சிவர் போய்விடின் நாய்க்குகன் என்றெனையோதாரோ". இதன் பொருளாவது, "எனது அருமைப் பிராணநாதனுகிய கரியகோலக் காகுத்தன் அரசாட்சி செய்யமுடியாதபடி வஞ்சனை வழியினுல் ராஜ்யத்தையடைந்த பிரபுவும் இங்கு வந்துவிட்டாரோ? நெருப்பைக் கக்கவல்லவையான எனது சிவந்த அம்பெனப்படுபவை இப்பரதன் மேற்செல்லமாட்டாவோ? இவர் எனது அம்புக்குத் தப்பிப் பிழைத்துப்போய்விட்டால் நீசனிவனென்று உலகத்தார் என்னை இகழாரோ?" என்பதாம். உலகில் நாய்கள் நன்றியறிவிற் சிறந்தவை யென்று பேர்பெற்றிருக்கவும், சில நாய்கள் எதிரிகளிடும் தின்பண்டங்களைத் தின்றுகொண்டு வாளாவிருத்தலுமுண்டு; அதைக் கருதி "நாய்க்குகன் என்று எனையோதாரோ?" என்றதாகக் கொள்ளுதல் சிறக்கும்.

## 14. அஜ்ஞர் ப்ரமிக்கிற வர்ணுச்ரமவித்யா

ஆசார்யஹ்ருதயம் முதற் பிரகரணத்தின் முடிவான சூர்ணிகை இது. அங்குக் கீழே "வம்சபூமிகளை உத்தரிக்க" இத்யாதி சூர்ணையிலிருந்து ஆழ்வாருடைய ஜன்ம ப்ரபாவம் சொல்லப்பட்டு வருகிறது. ப்ரக்ருத சூர்ணிகையின் தாத்பர்யம் ஸகல சாஸ்த்ர ஸாரமானது. சூர்ணிகை வருமாறு:—"அஜ்ஞர் ப்ரமிக்கிற வர்ணுச்ரம வித்யா வ்ருத்தங்களை கர்த்தப ஜந்மம் ச்வபசாதமம் சில்பநைபுணம் பஸ்மாஹுதி சவவிதவாலங்கார மென்று கழிப்பர்கள்". இதன் கருத்துச் சுருக்கமாவது :— எம்பெருமானுக்கு அடிமைப்பட்டிருத்தலே ஆத்மாவுக்கு நிரூபகமென்று நிஷ்கர்ஷித்து அதற்குத் தகுதியாக த்யாஜ்ய உபாதேயங்களைப் பகுத்துணரத்தக்க ஞானமில்லாதவர்கள், எம்பெருமானது ஸம்பந்த மின்மையாலே நிக்ருஷ்டங்களாயிருக்கிற வர்ண, ஆச்ரம, வித்யாவ்ருத்தங்களை உத்தமவர்ணமென்றும், உத்தமாச்ரமமென்றும், ஸத்வித்யை யென்றும், ஸத்வ்ருத்தமென்றும் உத்க்ருஷ்டமாக ப்ரமித்திருப்பர்கள்; ஆனல் அவற்றை ஞானிகள் இகழ்வர்கள்; எங்ஙனே என்னில்; — *சதுர்வேததரோ விப்ரோ வாஸுதேவம் நவிந்ததி, வேதபாரபராக்ராந்தஸ் ஸவை ப்ராஹ்மண கர்த்தப:* என்று நான்கு வேதங்களையும் அதிகரித்துவைத்தே வேத விழுப்பொருளாகிய எம்பெருமானை அறியாதவன் குங்குமஞ்சுமந்த கழுதைபோலே தான் சுமந்துகொண்டு திரிகிற வேதத்தின் பரிமள மறியாத பிராமணக் கழுதை யென்றும், *ச்வபசோபி மஹீபால! விஷ்ணு பக்தோ த்விஜாதிக: விஷ்ணு பக்தி

விஹீநஸ்து யதிச்ச ச்வபசாதம:* என்று உத்தமாச்ரமியானாலும் எம்பெருமானிடத்தில் பக்தியில்லாதவன் சண்டாளனிற்காட்டிலும் கீழ்ப்பட்டவனென்றும், *தத் கர்ம யந் ந பந்தாய ஸா வித்யா யா விமுக்தயே, ஆயாஸாய அபரம் கர்ம வித்யாந்யா சில்பநைபுணம்* என்று மோக்ஷார்த்தமாக உபயோகப்படும் வித்யை எதுவோ அதுவே வித்யையாகும், அப்படியல்லாதது செருப்புக் குத்தக்கற்ற கல்வி போன்றதேயாகும் என்றும், *ஆம்நாயாப்யஸநாநி அரண்யருதிதம் வேதவ்ரதாநி அந்வஹம் மேதச்சேத பலாநி பூர்த்தவிதயஸ் ஸர்வே ஹுதம் பஸ்மநி, தீர்த்தாநாமவகாஹநாநி ச கஜஸ்நானம் விநா யத்பதத்வந்த்வாம்போருஹஸம்ஸ்ம்ருதீர் விஜயதே தேவஸ் ஸ நாராயண:* (முகுந்தமாலை) என்று எம்பெருமானுடைய சிந்தனை யில்லாதவர்கள் செய்கின்ற கர்மாநுஷ்டாநம் சாம்பலிலிட்ட ஆஹுதி போலே ப்ரயோஜனமற்றது என்றும், *யஸ்யாகிலாமீவஹபிஸ் ஸுமங்கலை: வாசோ விமிச்ரா குணகர்மஜந்மபி:, ப்ராணந்தி சும்பந்தி புநந்திவை ஜகத் யாஸ் தத்வியுக்தாச் சவசோபநா மதா:*—*விஷ்ணு பக்திவிஹீநஸ்ய வேதச் சாஸ்த்ரம் ஜபஸ் தப: அப்ராணஸ்யேவ தேஹஸ்ய மண்டநம் லோகரஞ்ஜநம்* என்று பகவத் விஷயத்தில் அந்வயம் பெறாத உக்திகளும் பகவத்பக்தியில்லாதவனுடைய அறிவு நடத்தையும் பிணக்கோலம் செய்வதொக்குமென்றும், *ப்ராதுர்ப்பாவைஸ் ஸுரநரஸமோ தேவதேவஸ் ததீயா ஜாத்யா வ்ருத்தைரபி ச குணதஸ் தாத்ருசோ நாத்ர கர்ஹா, கிந்து ஸ்ரீமத், புவநபவநத்ராணத: அந்யேஷு வித்யாவ்ருத்தப்ராயோ பவதி விதவாகல்பகல்ப: ப்ரகர்ஷ:* என்று பகவத் விஷயத்தில் அந்வயமற்றவர்களுடைய கல்வியொழுக்கச் சிறப்புகள் பகவத் ஸம்பந்த ஜ்ஞாநமாகிற ஸுமங்கலி லக்ஷணமில்லாமைபற்றி விதவாலங்கார துல்யமென்றும் ஞானிகள் இகழ்வர்கள்.—ஆக இப்படி பகவத்விஷய ஸம்பந்தமற்ற வர்ணாச்ரமங்களும் ஞானவொழுக்கங்களும் ஹேயமென்கையாலே கீழே தாழ்ந்த ஜந்மமாகக் கருதப்பட்ட ஜந்மம் இன்னதென்று நிரூபிக்கப்பட்டதாயிற்று.

## 15. அவனேயவனுமவனுமவனும்

திருவாய்மொழியில் (9-3-2) "அவனே யகல்ஞாலம்" என்கிற பாசுரத்தில் 'அவனே' என்கிற சொல் ஏழு விசை வந்திருக்கிறது. முன்னடிகளில் இருவிசை மட்டுமே. பின்னடிகளில் ஐந்துவிசை அச்சொல் வந்துள்ளது. 'வேதந்தமிழ் செய்த மாறன்' என்பதை மூதலிக்கு மிவ்விடம். வேதமோதாதவர்கள் இவ்விடத்திற்குப் பொருளுணரவியலாது. முன்னோர்களின் வ்யாக்யானத்தையடியொற்றி நமது திவ்யார்த்த தீபிகையிலுள்ள வாக்கியங்களிவை. அவனே அவனுமித்யாதி—பிரமன், சிவன், இந்திரன் முதலானோருடைய ஸ்வரூபஸ்திதி ப்ரவ்ருத்திகளும் அவனிட்ட வழக்கென்கிறது. பிரமன், சிவன், இந்திரன் முதலானோருடைய பெயர்கள் ஒன்றும் பாசுரத்தில் இல்லையே என்று சங்கிக்கவேண்டா; அவனும் அவனும் அவனும் என்று சுட்டுப் பெயர்களாகவே இங்கெடுத்திருப்பது உபநிஷச்சாயை; நாராயணாநுவாகத்தில் *ஸ ப்ரஹ்மா ஸ சிவஸ் ஸேந்த்ரஸ் ஸோக்ஷர: பரமஸ்ஸ்வராட்* என்று ஸ:, ஸ:, ஸ: என்று நிர்தேசித்திருப்பவற்றையே உட்கொண்டு "அவனுமவனுமவனும்" என்றருளிச் செய்தபடி. "மற்றெல்லாமும் அவனே அறிந்தனமே"—பிரமன் சிவனிந்திரனென்று பிரித்துச் சொல்ல வேணுமோ? ப்ரதாநர்

அப்ரதாநர் என்கிற வாசியின்றிக்கே ஸகல சேதநாசேதநர்களும் அவனிட்ட வழக்கே என்னுமிவ்விஷயத்தை எம்பெருமானே உணர்த்த உணர்ந்தேனென்ற படி. *மயர்வறமதிநலமருளப்பெற்றவரிறே இவர்தாம். (இவ்விடத்தில் ஓர் இதிஹாஸம் கேளீர்.) ஸ்ரீ காஞ்சியில் எண்பது வருஷங்கட்கு முன்பு திருப்புட்குழி ஸ்ரீ க்ருஷ்ணதாதாசாரியர் ஸ்வாமி என்கிற ஒரு மஹாவித்வான் (திருப்புட்குழி அப்பா என்று ப்ரஸித்தரானவர்) எழுந்தருளியிருந்தார். ஒரு நாள் அவரிடத்தில் ஒரு சைவத் தமிழ்ப்புலவர் வந்து தம்முடைய புலமையை விளக்கிக் கூறினர். அவர் தம்மை 'ப்ரத்யக்ஷ அகஸ்த்யமுனி' என்று சொல்லிக்கொள்வராம். அப் புலவரை அந்தத் திருப்புட்குழி ஸ்வாமி தேவப்பெருமாள் ஸன்னிதிக் கழைத்து வந்து அங்குள்ள அத்யாபக ஸ்வாமிகளிடத்தில் அவருடைய புலமையைப் பரக்கக் கூறினர். அவ்வத்யாபக ஸ்வாமிகளில் பெரியவராயிருந்த ஒருவர் அப்புலவரை நோக்கித் 'தங்களுக்கு ஆழ்வார் அருளிச்செயலில் பரிசயமுண்டோ?' என்று கேட்க அதற்கிவர், ''தாராளமாக உண்டு. திருவாய்மொழி முதலான ப்ரபந்தங்களைப் பலகால் பலர்க்கு ப்ரவசநமும் செய்திருக்கிறேன்'' என்றார். உடனே அவர் இந்தப் பாசுரத்தைச் சொல்லி, ''இதில் 'அவனேயவனும் அவனும் அவனும்'என்றிருக்கிறது எங்களில் ஒருவர்க்கும் பொருள் புரியவில்லை. தாங்கள் கூறினல் நன்றி பாராட்டு வோம்'' என்றார். புலவர் நாலு நாழிகை ஆலோசித்துவிட்டு, ''உங்கள் ஆசார்யர் கள் வ்யாக்யானம் செய்திருப்பர்களே. அதில் விளங்கவில்லையோ?'' என்றாராம். ''விளங்காமையால்தான் கேட்கிறோம்'' என்று சொல்ல வெட்கமடைந்து போய் விட்டாராம்.

## 16. ஆமாறறியும்பிரானே !

பெரியாழ்வார் திருமொழி (2-7-8) சீமாலிகனவன் பாசுரத்தின் மூன்றாமடி இது. இங்கு ஆமாறறியும் பிரானே! என்று எம்பெருமானை விளித்தது வெறும னன்று; எதுகைக்காகவன்று. இப்பாட்டின் முன்னடிகளிற் குறித்த கதையாவது மாலிகன் என்பவனோடு தோழமை கொண்டு பிறகு அவனையே சக்கரப்படையினல் கண்ணபிரான் தொலைத்தருளினன் என்பது. தோழமை கொண்டவிடத்தில் இத் தகைய தீய செயல் செய்வது தகுமா என்று விவேகிகளுக்குக் கலக்கமுண்டாகும். அதற்குப் பரிகாரமாகவே 'ஆமாறறியும்பிரானே!' என்ற விளி அவதரித்தது. ஸமய விசேஷங்களில் செய்யவேண்டியவற்றைச் செவ்வனே உணர்ந்து செய்ய வல்லவன் எம்பெருமான் ஆதலால் அவனுடைய செயலில் ஏதும் சங்கிக்கலாகாது என்று தெளிவித்தபடி..சீமாலிகன் கதைமேலே 'சீ' என்னு மெழுத்திற் காணலாகும்.

## 17. ஆமேயமரர்க்கறிய

பொய்கையாழ்வாருடைய முதல் திருவந்தாதியில் நாற்பத்தைந்தாம் பாட் டின் தொடக்கமிது. இப்பாட்டில் அபூர்வமானதொரு கதையை ஆழ்வார் அருளிச் செய்கிறார். பாட்டுத் தொடங்கும்போதே ''அமரர்க்கறியலாகுமோ? நாமே அறி வோம்'' என்று கம்பீரமாக ஸாதிக்கிறார். அக்கதையை ''பூமேய மாதவத்தோன் தாள்பணிந்த வாளரக்கன் நீண் முடியைப் பாதமத்தாலெண்ணினன் பண்பு'' என்ற

பின்னடிகளிற் குறிப்பிடுகிறுர். இவ்வரலாறு வருமாறு. முன்பு இராவணன் தனது பத்துத் தலைகளையும் மறைத்துக்கொண்டு நான்முகனிடஞ்சென்று வரம் வேண்டிக் கொள்ளுமளவில் எம்பெருமான் ஒரு சிறு குழந்தை வடிவாய் அப்பிரமனுடைய மடியிலே உறங்குவான்போலேகிடந்து 'இவன் பத்துத் தலைகளையுடைய இராவணன்; ஸ்வஸ்வரூபத்தை மறைத்துக்கொண்டு உன்னை வஞ்சித்து வரம் வேண்டிக்கொள்ள வந்திருக்கிறுன்; இவனுக்கு நீ வரமளித்தால் பெருந் தீங்காக முடியும்' என்று தெரிவிப்பவன்போன்று தன் திருவடியால் அவ்விராவணனுடைய பத்துத் தலைகளையும் எண்ணிக் காட்டினன். இதிஹாஸ புராணங்களில் இவ்வரலாறு உள்ளவிடம் தெரியவில்லை. மூன்ரும் திருவந்தாதியில் (77) ஆய்ந்தவருமறையோன் என்று தொடங்கும் பாசுரத்தில் பேயாழ்வாரும், நான்முகன் திருவந்தாதியில் (44) கொண்டுகுடங்கால் என்னும் பாசுரத்தில் திருமழிசையாழ்வாரும் இக்கதையை அநுஸந்தித்துள்ளனர்.

## 18. ஆயிரந்தோள் பரப்பி முடியாயிரம்

எம்பெருமானைப்பற்றி ஆயிரமாயிரமாகப் பேசுவதில் ஒரு விநோதரஸம் விஜ்ஞாபிக்கிறேன். வேதபுருஷன் மூன்று ஆயிரம் காட்டினுன். திருமங்கையாழ்வார் நான்கு ஆயிரம் காட்டினர். நம்மாழ்வார் ஐந்து ஆயிரம் காட்டினர் பெரியாழ்வார் ஆறு ஆயிரம் காட்டினர். [இதை அடைவே விவரிக்கின்றேன்.] (1) வேதபுருஷன் 'ஸஹஸ்ரசீர்ஷா புருஷ: ஸஹஸ்ராக்ஷஸ் ஸஹஸ்ரபாத்' என்று மூன்று ஸஹஸ்ரபதங்களாலே மூவாயிரம் காட்டினுன். (2) திருமங்கையாழ்வார் பெரிய திருமொழியில் 5-7-6 'ஆயிரங் குன்றம் சென்று தொக்கனைய அடல்புரையெழில் திகழ்திரடோள் ஆயிரந்துணியவடல் மழுப்பற்றி மற்றவனகல் விசும்பணைய, ஆயிரம் பெயராலமரர் சென்றிறைஞ்ச அறிதுயிலலைகடல் நடுவே ஆயிரஞ்சுடர்வாயரவணைத்துயின்ருனரங்க மாநகர் அமர்ந்தானே'' என்ற பாசுரத்தில் நாலாயிரம் காட்டினர். (3) நம்மாழ்வார் திருவாய்மொழியில் (8-1-10) தாள்களை எனக்கே என்கிற பாட்டில் ''தோள்களாயிரத்தாய் முடிகளாயிரத்தாய் துணைமலர்க்கண்களாயிரத்தாய், தாள்களாயிரத்தாய் பேர்களாயிரத்தாய்'' என்று ஐந்து ஆயிரம் காட்டினர். (4) பெரியாழ்வார் தமது திருமொழியில் (4-3-10) ''ஆயிரந்தோள்பரப்பி முடியாயிரமின்னிலக, ஆயிரம் பைந்தலைய அனந்தசயனன் ஆளும்மலை, ஆயிரமாறுகளும் சுனைகள் பலவாயிரமும் ஆயிரம் பூம்பொழிலுமுடை மாலிருஞ்சோலையதே'' என்கிற பாசுரத்தில் ஆறு ஆயிரங்கள் காட்டினர். இவற்றை எடுத்துரைத்தல் அநுபவரஸிகர்களுக்குப் பரமபோக்யமாயிருக்கும்.....

## 19. ஆங்காரவார மதுகேட்டு அழலுமிழும்

எம்பெருமான் திறத்தில் பரிவின் மிகுதியால் அவத்ய சங்கையுண்டாகிப் பரமபக்தர்கள் மங்களாசாஸநம் செய்வது இந்நிலத்தில் விசேஷமாகவுண்டு. இது பரமபதத்திலு முண்டென்பதைத் திருமழிசைப்பிரான் தமது திருவந்தாதியில் பத்தாம் பாட்டில் அற்புதமாக வருளிச் செய்கிறுர். அப்பாசுரம் வருமாறு. ''ஆங்காரவார மதுகேட்டு, அழலுமிழும் பூங்காரரவணையான் பொன்மேனி,

யாங்காண வல்லமேயல்லமே மாமலரான் வார்சடையான், வல்லார யல்லரே வாழ்த்து'' இதன் கருத்தாவது. 'ஆங்ந' என்றது பரமபதத்திலே என்றபடி. அவ்விடத்தில் ஆரவாரமாவது நித்ய முக்தர்கள் பெருமிடறு செய்து ஸாமகாநம் பண்ணுவர்களே அந்த ஆரவாரம். அது திருவனந்தாழ்வானுடைய செவியிற் பட்டவாறே 'இது ஸாம கோஷம்' என்பதை மறந்து 'அஸுரராக்ஷஸர்கள் திங்கிழைக்க இவ்விபூதியிலும் வந்து கூச்சலிடுகின்றுர்கள் போலும்' என்று ப்ரேம மடியாகக் கலங்கி, அவர்கள் எம்பெருமானருகிற் கிட்டமுடியாதபடி விஷாக்நியை வாந்தி செய்துகொண்டேயிருக்கிருனும். பரிவின் மிகுதியினுல் அச்சத்திற்கு நிலமல்லாத ஸ்தாநத்திலும் அஞ்சிக் காப்பிடுகின்ற திருவனந்தாழ்வான் மீது சயனித்தருளா நின்ற பெருமானுடைய திவ்யமங்கள விக்ரஹத்தை நாம் ஸேவிக்க முடியாதோ? அவனுடைய நிர்ஹேதுக விஷயீகாரம் பெற்ற நமக்கு அப்பரமனுடைய திருமேனி ஸேவை எளிதேயாம்; பின்னை யார்க்கு அரிதென்னில்; இறுமாப்புக் கொண்டிருக்கின்ற தேவதாந்தரங்கட்கே அஃது அரிது. முன்னடிகளிற் கூறிய அஸ்தாநே பயசங்கை திருநாட்டிலு முண்டென்பதை பட்டரும் ஸ்ரீ குண ரத்ந கோசத்தில் ''ஸ்நேஹாத் அஸ்தாநரக்ஷா வ்யஸநி பிரபயம் சார்ங்கசக்ராஸி முக்க்யை:'' என்கிற ச்லோகத்திலுல் அருளிச் செய்தார்.

## 20. ஆழநெடுந்திரையாறு கடந்திவர் போவாரோ

கம்பருடைய அயோத்தியாகாண்டத்துப் பாசுரம் இது. கீழே அகாரவரிசையில் எடுத்துக்காட்டியுள்ள 'அஞ்சனவண்ணன் என்னுருயிர் நாயகனுளாமே' என்கிற பாட்டுக்கு அடுத்தபடியானது ''ஆழநெடுந்திரையாறு கடந்திவர்போவாரோ? வேழநெடும்படை கண்டு விலங்கிடு வில்லாளோ? தோழமையென்றவர் சொல்லிய சொல்லொரு சொல்லன்றோ? ஏழைமை வேடனிறந்திலனென்றெனையேசாரோ?'' என்பது. இதன் கருத்தாவது, ''இப்பரதன் ஆழத்தையும் நீட்சியையும் அலைகளையுமுடைய இக்கங்கையாற்றை என்னுதவியில்லாமல் தாண்டிப்போக வல்லவரோ? நான் இவனுடைய யானைச் சேனைகளைக் கண்டு அஞ்சிநடுங்கி விலங்கிப்போகும் வில் வீரனோ? அவ்விராமன் என்னைத் தோழனுகக் கொண்டு சொல்லியவார்த்தை எப்படிப் பட்டது! அந்நட்புக்கு ஏற்ப நான் நடவாவிட்டால் எளியனுன இவ்வேடன் இங்ஙனம் மானங்கெட்டு வாழ்வதைவிட இறந்திருக்கலாகாதா என்று என்னை உலகத்தார் பழிக்க மாட்டாரா?'' என்றும். இங்கு ஓர் ஆராய்ச்சி. இராமபிரான் குஹப்பெருமாளைச் சந்தித்தபோது ஓரிரவெல்லாம் இருவர்க்கும் ஸம்பாஷணை நடைபெற்றிருக்கிறது. இராமன் குகனேடு என்ன வார்த்தை பேசியிருப்பர்! ''தாமேவ இக்ஷ்வாகு நாதஸ்ய பரதஸ்ய கதாம் குரு'' என்று இளையபெருமாளை நோக்கிச் சொல்லுகிற இராமபிரான் பரதாழ்வானுடைய நற்குணங்களைக் குகனேடு பேசியிருப்பர் என்பதில் ஐயமில்லை. அதனுல் குகன் பரதனுடைய உண்மைத் தன்மையை அறிந்தேயிருக்கக் கடவன். அப்படியிருந்தும், அந்தப் பரதன்திறத்தில் இப்போது இவ்வளவு தீவிரமாகப் பேசுவது பொருந்துமா என்று சங்கிக்கவே நேரும். இதுதான் பரிவின் மிகுதியாலுண்டாகும் அஸ்த்தாநே பயசங்கை என்பது. இது பரமப்ரேமசாலிகளின் உள்ளத்திற்கே நிலமாகும்.......

## 21. ஆசாரியர்களனைவருமுன்னுசரித்தவாசாரம்

உபதேசரத்தினமாலையில் மணவாளமாமுனிகள் அருளிச்செய்த விந்தப் பாசுரம் ஸத்ஸம்ப்ரதாயநிஷ்டர்களால் அநவரதமும் சிந்திக்கத்தக்கது. பாசுரம் வருமாறு. "ஆசாரியர்களனைவரு முன்னுசரித்த வாசாரந்தன்னை யறியாதார், பேசுகின்ற வார்த்தைகளைக் கேட்டுமருளாதே பூருவர்கள் சீர்த்த நிலைதன்னை நெஞ்சே சேர்". இப்பாசுரத்தின் கருத்தாவது, "பூருவாசாரியர்களெல்லாரும் அனுஷ்டித்துப் போந்த அனுட்டானத்தை அறியப்பெறுதவர்கள் கண்டபடி சொல்லுகின்ற பேச்சுக்களைக் கேட்டு மனம் திரியாமல் முன்னோருடைய சீரிய நிஷ்டையையே மனமே! அனுவர்த்திக்கப் பார்" என்பது. புதுவைஷ்ணவங் கொண்டாடுஞ் சிலர் புதிதுபுதிதாகச் சில நடத்தைகளைக் கைப்பற்றி, 'இதைச் செய்யவேணும், இதை அனுட்டிக்கவேணும்' என்றிப்படிப் பேசவும் திருத்தவும் புறப்படுவர்கள்; நம்முடைய பூருவாசாரியர்களின் அனுஷ்டான முறைமைகளைத் தெரிந்துகொள்ளாதாருடைய அந்தப் பேச்சுக்களினுல் மனம் திரியாமல் *செய்யாதன செய்யோம்* என்றும் *மேலையார் செய்வனகள்* என்றும் ஆண்டாள் அருளிச்செய்தபடியே பூர்வாநுஷ்டான ஸரணியிலேயே வர்த்தித்தல் வேண்டுமென்று நியமித்தாராயிற்று. திருப்பாவையில் "செய்யாதன செய்யோம்" என்றவிடத்திற்கு பூர்வர்கள் அருளிய வ்யாக்யானமாவது "சாஸ்த்ரம் விதித்ததே யாகிலும் தர்மஜ்ஞஸமயப்ரமாணமாகையாலே மேலையார் செய்யாதவற்றைச் செய்யக்கடவோமல்லோம்" என்பதாம்.........

## 22. ஆழி யென்னும் படையோடு நாந்தகமும் படர்தண்டும்

இராமானுச நூற்றந்தாதியில் (33) "'அடையார் கமலத்தலர்மகள் கேள்வன் கையாழியென்னும் படையோடு நாந்தகமும் படர்தண்டும் ஒண்சார்ங்கவில்லும் புடையார் புரிசங்கமும் இந்தப் பூதலங்காப்பதற்கென்றிடையே இராமாநுச முனியாயின இந்நிலத்தே" என்கிற பாசுரத்தினுல் எம்பெருமானுர் பஞ்சாயுதாழ்வார்களின் திருவவதாரபூதர் என்பது தெரிய வருகிறது. இதை அடியொற்றி வேதாந்தவாசிரியர் யதிராஜஸப்ததியில் 'அப்ருதக் ப்ரதிபந்நயந்மயத்வை: வவ்ருதே பஞ்சபிராயுதைர் முராரே:' என்று பணித்தார். அவர்தாமே அந்த ஸப்ததியிலேயே 'விஷ்வக்ஸேநோ யதிபதி ரபூத்வேத்ரஸாரஸ்த்ரிதண்ட:' என்று விஷ்வக்ஸேநாவதாரமாகவும் பணித்தார். எம்பெருமானுரைப் பற்றின சரித்திர நூல்கள் பலவற்றில் திருவனந்தாழ்வானவதார மென்று பேசப்பட்டுள்ளது. இவற்றில் எது உண்மையானதென்று பலர்க்கு விசிகித்ஸை உண்டாகிறது. இதைப்பற்றினதெளிவை அடியேனுடைய 'சேஷாவதாரச் சிறப்பு' என்னும் சிறு நூலில் காண்க. அந்நூல் மேலே குறித்த நூற்றந்தாதிப் பாசுர உரையோடும் முதற்பதிப்பில் சேர்த்து அச்சிடப்பட்டுள்ளது.........

## 23. ஆதலால் பிறவி வேண்டேனரங்கமா நகருளானே!

தொண்டரடிப்பொடியாழ்வாருடைய திருமாலையில் மூன்ருவது பாசுரமிது வென்பது ப்ரஸித்தம். பிறவியில் நேரக்கூடிய வருத்தங்கள் பலவற்றையும் விரியக்

கூறி, 'ஆதலால் பிறவி வேண்டேன்' என்கிறுர். இப்படிப் பிறவியை வெறுப்பவர்கள் பெரும்பாலும் ஆழ்வார்களனைவருமாவர். நம்மாழ்வார் 'இருள்தருமா ஞாலத் துளினிப்பிறவியான் வேண்டேன்' என்றுர். பெரியாழ்வார் 'மறுபிறவி தவிரத் திருத்தி உன் கோயில் கடைப்புகப்பெய் திருமாலிருஞ்சோலை யெந்தாய்' என்றுர். திருமழிசைப்பிரான் 'இயக்கருத பல்பிறப்பிலென்னைமாற்றி' என்றுர். இங்ஙனே பல பாசுரங்கள் காண்கிறோம். ஆண்டாளொருத்தியே 'எற்றைக்கு மேழேழ் பிறவிக்கும்' என்பதனுல் மேன்மேலும் பிறந்து கொண்டேயிருக்க வேண்டுமென்னும் அவாவை ஆவிஷ்கரித்தாள். அதன் மருமத்தை மேலே (எ) எழுந்து வகுப்பில் 'எற்றைக்கும் ஏழேழ் பிறவிக்கும்' என்ற மகுடத்தின்கீழ் காணலாகும்.........

## 24 ஆவியுள்குளிர எங்ஙனே உகக்குங்கொலின்றே

திருவாய்மொழியில் (6-7-5) 'மேவிநைந்துநைந்து விளையாடலுறுள்' என்கிற பாசுரத்தின் ஈற்றடி இது. நம்மாழ்வார் திருக்கோளூரில் அவகாஹித்த படியைத் தாய் பாசுரத்தாலே சொல்லுகிறுர். 'ஆவியுள்குளிர' என்றவிடத்து ஈட்டிலே சுவைமிக்க ஓர் ஐதிஹ்யமுள்ளது. அதாவது; இவ்விடத்தை பட்டர் அருளிச் செய்யாநிற்கச் செய்தே மேலெழ அருளிச் செய்தாராய், சீராமப்பிள்ளை இருந்தவர் 'ஜீயா! எம்பார் அருளிச்செய்யும்போது ஆவியு(3)ள் குளிர என்று முகந்துகொண்டருளிச் செய்யும்படி கேட்டறிகையில்லையோ என்றருளிச் செய்தார்.' [இதனைச் சிறிது விளக்குவோம்.] நாம் எல்லாரும் ஸந்தை சொல்லும்போதும் ஸன்னிதியில் ஸேவிக்கும் போதும் 'ஆவியுள் குளிர' என்று ஸாதாரணமாகச் சொல்லிப் போருகிறோம். ஒருகால் பட்டரும் இங்ஙனே அநுஸந்தித்தருள, அதுகேட்ட அவருடைய திருத்தம்பியாரான சீராமப்பிள்ளை இவ்விடத்தை எம்பார் அநுஸந்திக்கும்படியை நினைவூட்டினுர். ஆழ்வார் 'ஆராவமுதாய் அடியேனுவியகமே தித்திப்பாய்' என்றருளிச் செய்தவராகையாலே 'உள்குளிர' என்பதை ஸாமாந்யமாகச் சொல்லிப்போய் விடாமல் ஆழ அழுத்திச் சொல்லவேணுமென்று காட்டினபடி. இதில் 'ஜீயா!' என்றது 'ஸ்வாமிந்' என்றபடி. முற்காலத்தில் பெரியோர்களைச் சீயரென்று வழங்கி வந்தார்கள். சீரியர் என்பதுதான் சீயர் என்பது. அன்றி, சீயம் போன்றவர் சீயர் என்று கொண்டு புருஷஸிம்ஹமானவர் என்றும் கொள்வர்...........

## 25 ஆழ்வானைப்பற்றின அபூர்வ ஐதிஹ்யங்கள் மூன்று

பின்பழகிய பெருமாள் ஜீயர் அருளிச் செய்த ஆறுயிரப்படி குருபரம்பரா ப்ரபாவத்தில் கூரத்தாழ்வானுடைய சரிதைகள் உள்ளன. அதில் இல்லாத சில ஐதிஹ்யங்கள் (ஆழ்வானைப்பற்றியவை) அருளிச்செயல் வியாக்கியானங்களில் ஸேவிக்கப்படுகின்றன. அன்னவற்றில் சில காண்மின். (1) திருவாய்மொழியில் (7-10-5) *பலரடிப்போதுகளென்னும்பாட்டில் இரண்டாமடி 'பலரடியார்முன்பருளிய' என்பது. இங்கு ஈட்டில் அருளியுள்ள ஐதிஹ்யத்தின் சாரமாவது. எம்பெருமானுர் காலத்திலே அரசாண்டு வந்த சோழராஜன் வைஷ்ணவ த்ரோஹியாகையால் ஆங்காங்குள்ள விஷ்ணு ப்ரதிமைகளை யெடுத்து எறிந்துவிடவேணுமென்று முயன்றபோது அவனுக்கு இஷ்டரானவர்கள் மந்த்ரபூர்வமாக ப்ரதிஷ்டைசெய்யப்

பட்ட விஷ்ணு பிம்பங்களையழியச் செய்தால் ஊருக்குப் பெருத்த தீங்கு விளையும் என்று சொல்ல, அது கேட்ட சோழன் அந்த ப்ரதிமைகளில் தெய்வசக்தியை உத்வாஸனம் பண்ணி யழியச்செய்வோம் என்று நிச்சயித்து ஒரு ப்ராஹ்மணனுக்குப் பணங்கள்கொடுத்து' நீ அத்ருச்யாஞ்ஜனமிட்டுக் கொண்டு உத்வாஸநம் பண்ணு' என்று ஆஜ்ஞாபிக்க அவனும் திவ்யதேசங்களிலே சென்று அப்படியே அத்ருச்யாஞ்ஜநமிட்டுக்கொண்டு உத்வாஸனம் பண்ணி பகவத்விக்ரஹங்களைக் கடலிலே எடுத்தெறிகிற செய்தியை எம்பெருமானார் திருச்செவிசாத்தி 'நாம் நெடுநாளாக இத்திருவரங்கம் பெரிய கோயிலை விடாதே நோக்கிக் கொண்டு போருகிறோம்; இவ்விடத்திற்கும் அழிவு வரும்படி ஆஸுரவர்க்கம் மேலிடாநின்றது. இனிமேல் செய்ய வேண்டுவதென்?' என்று வியாகுலப்பட்டுப் பெரியநம்பியோடே சிந்தித்திருக்க, 'நான் பெருமாளுடைய திருவெல்லையிலே ஒரு ப்ரதக்ஷிணம் வரும்படியாக உம்முடைய சிஷ்யர்களில் ஒருவரை என் பின்னே அனுப்பவேணும். என்பின்னே வாராநின்றால், ஒருவன்பின்னே போகிறோம் என்று தன்னெஞ்சில் படாதே நிழல்போல என்னைப் பின் செல்பவனாக இருக்கவேண்டும். அப்படிப்பட்ட ஒரு சிஷ்யனைப் பார்த்தனுப்பும்' என்று பெரியநம்பி திருவாய்மலர்ந்தருள இப்படிப்பட்ட ஆத்மகுண பரிபூர்ணரான சிஷ்யர் ஆழ்வானொருவனே என்பது உடையவர்க்கு நன்கு தெரிந்திருந்தும் இதனைப் பெரியநம்பி திருவாக்கினால் வெளியிடுவிக்க வேணுமென்றெண்ணிக்கொண்டு நம்பியை நோக்கி 'இப்படிப்பட்ட சிஷ்யர் இவ்விடத்தில் இருப்பதாகத் தெரியவில்லையே' என்று சொல்லிநிற்க, 'நம் கூரத்தாழ்வானை அனுப்பலாகாதோ? என்று நம்பி நியமித்தருள அருகிலிருந்த ஆழ்வான் இதைக்கேட்டு 'நம்பிகள் நம் ஸ்வரூபத்தினுண்மையை இங்ஙனேயறிந்து பல சிஷ்யர்களின் முன்னே இப்படி யருளிச்செய்யும்படியான பாக்கியம் பெற்றோமே!' என்று பெருமகிழ்ச்சி யடைந்து நம்பிகளின் திருவுள்ளப்படியே பிரதக்ஷிணத்திற்குப் பின் சென்றார். 'பலரடியார் முன்பருளிய' என்ற இடத்திற்கு இது பொருத்தமான இதிஹாஸம். ... ... ... ... ... (5)

## 26. ஆழ்வானைப்பற்றி மற்றுமோர் ஐதிஹ்யம்

(2) பெரியதிருமொழி (7-5-2) 'பாரித்தெழுந்த' பாசுரத்தில் 'பாரதத்துத் தேரில் பாகனாயூர்ந்த' என்றவிடத்துப் பெரியவாச்சான்பிள்ளை யருளிச் செய்த ஸ்ரீ ஸூக்திகள். 'ஆழ்வானுக்கு மூலம் வாசித்துப் போந்தார் சிலரிலே ஒருவருக்கு க்ரந்தம் பார்க்கவேண்டி, ஆழ்வானோடே திருமுடிக்குறையிலே யிருந்து பாரா நிற்கச் செய்தே, அரையன் வந்தானாய், அவ்வளவிலே, அவர் கையில் க்ரந்தத்தை ஆழ்வான் தான் வாங்கிப் படித்துக் கொண்டிருந்தானாம். [விவரணம்] ஆழ்வானுக்கு நேத்ரபாடவம் குன்றியிருந்த காலத்தில் ஸ்ரீபாஷ்யாதி ப்ரவசனங்களுக்கு மூலபங்க்தி ஸேவிக்கச் சிலரைத் துணைகொண்டிருந்தார். அவர்களிலே ஒருவர்க்கு ஆழ்வானிடத்தில் ஒரு க்ரந்தம் ஸேவிக்க வேண்டியதாயிற்று. அவர் அபிமானமுள்ள ஆசார்ய புருஷர் போலும். அதனால் தாம் ஆழ்வானிடத்தில் சிஷ்யனாகயிருந்து வாசிப்பது பிறர்க்குத் தெரியலாகாதென்று கருதி அவர் இதை ஆழ்வான் பக்கலில் விஜ்ஞாபிக்க, ஆழ்வான் முக்குறும்பறுத்தவராகையாலே அதற்கிணங்கி ஏகாந்தமான ஓரிடத்திலே வீற்றிருந்து ப்ரவசநம் செய்துவந்தார். சிஷ்யர் கையிலே புஸ்தகமிருப்பது வழக்கம். ஒரு நாள் ஒரு ஜமீன்தார் அந்தப் பக்கமாக வரும்போது அவனைக்

கண்ட அந்த சிஷ்யன் தான் சிஷ்யனுக விருப்பதை அந்த ஜமீன்தார் தெரிந்து கொண்டு விடுவரோ என்று சங்கித்து நடுங்கியிருந்தார். அதையறிந்த ஆழ்வான் உடனே அவர் கையிலிருந்த புத்தகத்தைத் தம் கையிலே வாங்கிக்கொண்டு அந்த சிஷ்யனிடத்திலே தாம் கேட்பதாக (தம்மை சிஷ்யனுக) காட்டிவிட்டார். இது ஆழ்வானுக்கே அஸாதாரணமான குணவிசேஷம்.

## 27. ஆழ்வானைப்பற்றி இன்னமுமோர் ஐதிஹ்யம்

(3) பெரிய திருமொழியில் (எட்டாம்பத்து) சிலையிலங்கு பொன்னுழி ப்ரவேசத்தில் அருளிச் செய்யப்பட்டுள்ள ஐதிஹ்யம் (பெரியவாச்சான்பிள்ளையின் ஸ்ரீஸூக்தி) 'ராஜேந்த்ர சோழனிலே ஒரு ப்ராஹ்மணன் மகன் புத்தரோடே ஸம்ப்ரதாயமுண்டாய்ப் பூணூலையும் குடுமியையும் அறுத்துப்பொகட்டான். கூரத்தாழ்வான் அங்கே நடந்தவளவிலே சிகாயஜ்ஞோபவீதங்களைத் தரித்துக்கொண்டு வந்து புகுந்தான். பிதாவானவன் 'கூரத்தாழ்வானைச் சந்தித்தாயோ?' என்று கேட்டான். புறம்புள்ளார் 'நீ இதறிந்தபடி எங்ஙனே?' என்று கேட்க, 'ஆழ்வான் ஸன்னிதியில் தமோபிபூதரும் ஸத்வஸ்த்தராவர்கள் காண்' என்றான். இதன் விவரணம் வருமாறு. ராஜேந்திரசோழனென்னு மூரிலே ஒரு ப்ராஹ்மண குமாரன் பௌத்தருடைய ஸஹவாஸத்தாலே மதிகெட்டுத் தன் பூணூலை அறுத்தெறிந்தும் குடுமியைச் சிரைத்தொழித்தும் வ்ராத்யனுய்த் திரிந்துகொண்டிருந்தான். இப்படியிருக்கையில் ஒரு நாள் அவ்வூர்க்குக் கூரத்தாழ்வான் எழுந்தருளினர். அந்த ப்ராஹ்மண குமாரனுக்கு ஆழ்வான் ஏதாவது ஹிதோபதேசம் செய்தருளினரோ இல்லையோ தெரியாது; ஆழ்வான் அவ்வூர்க்கு எழுந்தருளினவளவே தெரியும். அவன் அப்போதே முன்போலே ப்ராஹ்மண லக்ஷணங்களுடன் வீட்டுக்கு வந்து சேர்ந்தான். அவனைக் கண்ட அவனது தகப்பனர், 'பிள்ளாய்! கூரத்தாழ்வானோடு சந்திக்கப் பெற்றாயோ? என்று கேட்க, அங்கிருந்த சிலர் இதைக்கேட்டு, உண்மையில் ஆழ்வானுடைய' அருளாலேயே இவன் திருந்தினன் என்பதைத் தாங்கள் மாத்திரம் நன்கறிந்தவர்களாகையாலே இந்த மருமத்தை இவர் எங்ஙனே தெரிந்து கொண்டாரென வியந்து 'நீர் இதை எப்படித் தெரிந்துகொண்டீர்?' என்று கேட்க, 'ஆழ்வானுடைய ஸன்னிதானத்தில் தாமஸர்களும் ஸாத்விகர்களாய்த் திருந்துவது வழக்கமன்றோ? நெடுநாளாகத் தாமஸனுய்க் கெட்டுப்போனவிவன் இன்று ஸாத்விக புத்தியுண்டாகித் திருந்தினனென்றால் ஆழ்வானோடே இவன் ஸந்தித்திருக்கவேணுமென்று தோன்றிற்று' என்றாராம் அவனது தகப்பனர்.

## 28. ஆமுதல்வனிவனென்று தற்றேற்றி

திருவாய்மொழியில் (7-9-3) 'ஆமுதல்வனிவன்' என்று தொடங்கும் பாசுரத்தின் விசேஷ விவரணம் கேண்மின். 'ஆமுதல்வனிவன்' என்பதற்கு இரண்டுவகையான நிர்வாஹம். முதல்வன் என்கிறவிது எம்பெருமானிடத்திலே அந்வயிப்பதாக ஒரு நிர்வாஹம். அது ஆழ்வாரிடத்திலே அந்வயிப்பதாக மற்றொரு நிர்வாஹம். 'இந்த எம்பெருமானே ஜகத்காரணபூதனென்று தன் பக்கலிலே எனக்குத் தெளிவு பிறக்கும்படியாகப்பண்ணி' என்பது முதல் நிர்வாஹத்தின் பொருள். 'குருகூர்ச்சடகோபனுகிறவிவன் ஸம்ஸாரிகளைத் திருத்திப் பணிகொள்ளும் விஷயத்திலே முதல்வனுகக் கடவன்—தலைவனுகக் கடவன் என்று திருவுள்ளம்பற்றி என் பக்கலிலே

தன் ஸ்வரூபாதிகளைத் தெளியப்பண்ணி' என்பது இரண்டாம் நிர்வாஹத்தின் பொருள். இங்கே ஈட்டு ஸ்ரீஸூக்திகள்: 'காரணவாக்யங்களில் உபாஸ்யனாகச் சொல்லப்படுகிறான் தானேயென்று தன் பக்கலிலே தெளியும்படி பண்ணியென்னுதல்; அன்றிக்கே, பரமபதத்தோபாதி ஸம்ஸாரத்தையும் திருத்த நினைத்தோம்; அதுக்கு இவன் முதலாம்-அடியாமிவனென்று என் பக்கலிலே தன் ஸ்வரூபாதிகளைத் தெளியப் பண்ணி யென்னுதல். இங்கே யருளிச்செய்யும் வார்த்தை—திருப்புற்றுக்குக் கிழக்கே கரியமாணிக்காழ்வார் திருமுன்பின் ஸோபானத்தில் ஆளவந்தார் எழுந்தருளியிருக்க, உடையவர் திருப்புற்றுக்குக் கிழக்காக எழுந்தருளிநிற்கக்கண்டு * ஆமுதல்வனிவன் * என்றருளிச் செய்தாராம் என்று. [ஸ்ரீ காஞ்சீ ஹஸ்திகிரியில் திருமடைப்பள்ளி ப்ரதக்ஷிணவீதியிலே ஆளவந்தார் யாதவப்ரகாசனோடே யிருந்த எம்பெருமானாரைத் திருக்கச்சிநம்பிகள் மூலமாகத் தெரிந்துகொண்டு 'ஆம் முதல்வனிவன்' என்று குளிரக் கடாக்ஷித்தருளின ஐதிஹ்யத்தையருளிச் செய்தபடி. இதனால், இரண்டாவது நிர்வாஹம் ஆளவந்தார் திருவுள்ளத்திற்கு மிகவுமிணங்கினதென்று காட்டினபடி. *ஸ்ரீமத்யாம் ஸ்யாதஸாவிதி* என்கிற அதிகரணஸாராவளி ச்லோகத்தில் ஸ்யாத் அஸௌ என்றதும் இப்பொருளதே.]

## 29. ஆர்த்தபுகழாரியர்கள் தாங்களருளிச் செயல்நடுவே

உபதேச ரத்தின மாலையில் மதுரகவியாழ்வாரைப்பற்றின பாசுரமொன்று 'வாய்த்த திருமந்திரத்தின் மத்திமமாம் பதம்போல் சீர்த்த மதுரகவி செய்கலையை ஆர்த்த புகழாரியர்கள் தாங்கள் அருளிச்செயல் நடுவே சேர்வித்தார் தாற்பரியம் தேர்ந்து என்பது.' இப்பாசுரம் அவசியம் அவதரித்திருக்க வேண்டுவது. ஆழ்வார்களருளிச்செய்த திவ்யப்ரபந்தங்களெல்லாம் எம்பெருமானுடைய ஸ்வரூபரூபகுண விபூதி சேஷ்டிதங்களைப் பரக்கப் பேசுவன. அப்படிப்பட்ட திவ்வியப்பிரபந்தங்களினிடையே ஆழ்வார் தோத்திரமான இவரது பிரபந்தம் சேருவதற்கு நியாயமில்லையே யென்று சிலர் சங்கிக்கக்கூடுமாதலால் அன்னவர்கட்குத் தெளிவு பெறுத்துமிப்பாசுரம். ஆழ்வார்களின் திவ்வியப்பிரபந்தங்களெல்லாம் பெரும்பாலும் திருமந்த்ரம், த்வயம், சரமச்லோகம் ஆகிய ரஹஸ்யத்ரயத்தின் பொருள்களையே விவரிப்பன ஆகும்; அதில் திருமந்த்ரத்தின் நடுவேயுள்ளதான நம: பதத்தில் நம் ஆசார்யர்கள் முக்கியமாக பாகவத சேஷத்வத்தை அநுஸந்தித்துப் போருவர்கள். இவ்விஷயம் முமுக்ஷுப்படியிலும் அதன் வியாக்கியானத்திலும் விசதம். அப்படிப்பட்ட பாகவத சேஷத்வத்தையே கனக்கப் பேசுமதான கண்ணிநுண் சிறுத்தாம்பு ஆழ்வார் அருளிச் செயல்களிடையே சேர்ந்து திகழவேண்டுவது அவசியம் என்று நம் ஆசார்யர்கள் திருவுள்ளம் பற்றினார்கள் என்றதாயிற்று.

## 30. ஆஹாயம் வை ப்ரஜாபதேர் விபாந் நாம லோக:

இது வேதவாக்கியம். க்ருஷ்ண யஜுஸ்ஸம்ஹிதையில் முதற்காண்டம் ஏழாவது ப்ரச்நத்தில் இது ஒரு பஞ்சாதியடி. [விநோதமான ஒரு இதிஹாஸம்] நான் வேதமோதி முடித்தபோது ஒரு ஸமயம் குளித்தலைக்குச் சென்றிருந்தேன். அங்கே அப்போது ஒரு வேத பாடசாலை மஹாவிபவமாக நடந்துகொண்டிருந்தது. அதில் உபாத்யாயராக இருந்த ஒரு கனபாடியோடு நெருங்கிய பழக்கம் ஏற்பட்டதெனக்கு.

நான் அங்குச் சென்றபோது அவர் வித்யார்த்திகளை பரீக்ஷைசெய்துகொண்டிருந்தார். அது ஸாதாரண பரீக்ஷை; அவரிடம் நான் சொன்னேன், 'என்னை எவ்விதமாகவும் பரீக்ஷிக்கலாம் நீங்கள். வேண்டியமட்டும் பரீக்ஷியுங்கள்' என்று. அவர் பல கேள்விகள் கேட்டுவந்தார். அவற்றில் இது ஒரு கேள்வி. 'மூன்றெழுத்தில் ஒரு பஞ்சாதியடி. அது தமிழ்ப்பதமாகவும் இருக்கும். அதைச் சொல்லுவீர்களா?' என்றார். உடனே 'ஆகா' என்றேன். அதற்கு ஆகட்டும் என்று பொருள் என்று சிலர் நினைக்கக்கூடும். கேள்வி கேட்டவர் உண்மை தெரிந்துகொண்டார். 'ஆஹாயம் வை ப்ரஜாபதே:' என்கிற பஞ்சாதியைத்தான் அவர் கேட்டார். அதையே நான் சொல்லிவிட்டேன். (அங்கு ஆஹா அயம் என்று பதம்) ஆகாயம் என்பது தமிழ்ப் பதம். அதன் பக்கத்தில் வை என்பதும் தமிழாகவுள்ளது. 'இப்படி மற்றொரு பஞ்சாதி சொல்லுவீரோ' என்றார். ''ஆவாயோ'' என்றேன். முதல்காண்டம் நாலாவது ப்ரச்நத்தில் ''ஆ வாயோ பூஷ ஸுசிபா:'' என்று அநுவாகத் தொடக்கம். ஸம்ஸ்க்ருதத்தில் ஆ வாயோ என்று இரண்டு பதம். தமிழில் ஆவாய் ஓ என்று இரண்டு பதம். இங்ஙனே பல பரீக்ஷைகள் நடந்தன. "தேஹிநோ திவஸா கதா:'

## 31. இல்லையெனக்கெதி ரில்லையெனக்கெதி ரில்லையெனக்கெதிரே

எம்பெருமானார் காலத்தில் திருவரங்கம் பெரிய கோயிலில் தேவதாஸிகள் நம்பெருமாள் விஷயமாகப் பல பாட்டுக்கள் பாடிக்கொண்டிருந்தனர். எம்பெருமானாருடைய வடிவழகில் ஈடுபட்ட அவர்கள் எம்பாரையணுகி 'ஸ்வாமி விஷயமாகச் சில பாசுரங்கள் தேவரீர் அருளிச்செய்து தந்தால் அவற்றையும் பாடவிரும்புகிறோம்' என்று விண்ணப்பஞ்செய்ய அப்போது எம்பார் சில பல பாசுரங்கள் பணித்துத் தந்தார். அவற்றில் தலையான பாசுரம் கேளீர்.

''பற்பமெனத் திகழ் பைங்கழலுன்றன் பல்லவமே விரலும் பாவனமாகிய பைந்துவராடை பதிந்த மருங்கழகும், முப்புரிநூலொடு முன்கையிலேந்திய முக்கோல் தன்னழகும் முன்னவர் தந்திடு மொழிகள் நிறைந்திடு முறுவல் நிலாவழகும், கற்பகமே விழிகருணை பொழிந்திடு கமலக் கண்ணழகும் காரிசுதன் கழல் சூடிய முடியும் கனநற்சிகை முடியும், எப்பொழுதும் எதிராசன் வடிவழகென்னிதயத்துளதால் இல்லையெனக்கெதி ரில்லையெனக்கெதி ரில்லையெனக்கெதிரே.' என்பதாம்...

## 32. இன்னார் தூதனெனநின்றான் எவ்வுள் கிடந்தானே

பெரிய திருமொழியில் (2-2-3) ''முன்னோர் தூது வானரத்தின் வாயில் மொழிந்துஅரக்கன் மன்னூர் தன்னை வாளியினால் மாளமுனிந்து அவனே பின்னோர் தூது ஆதிமன்னர்க்காகிப் பெருநிலத்தார் இன்னார் தூதனென நின்றான் எவ்வுள் கிடந்தானே.'' இங்கு விசேஷம் கேளீர். பட்டர்க்கு ஸ்ரீராமாவதாரத்திலே அளவற்ற பக்ஷபாத முண்டென்பது ப்ரஸித்தம். சிறியாத்தானென்பவர் பட்டருடைய அருளிச்செயல்களைக் கேட்க விரும்பி ஒருநாள் பட்டர் ஸந்நிதியிலே விடைகொண்டு, ''சக்கரவர்த்தி திருமகனுக்கு எல்லா ஏற்றமுமுண்டேயாகிலும் ஆச்ரிதர்களுக்காகக் கழுத்திலே ஓலைகட்டித் தூதுபோன ஏற்றமில்லையே; அந்த ஏற்றம் கண்ணபிரானுக்கேயன்றோ உள்ளது'' என்றார்; அதை

பட்டர் கேட்டருளி, "ஓய்! குணக்கடலாகிய இராமபிரானுக்குத் தூது போதல் அநிஷ்டமன்று காணும்; இக்ஷ்வாகு வம்சத்திலே ஸார்வபௌமனாகப் பிறந்தானாகையாலே மஹாராஜன் கழுத்திலே ஓலை கட்டித் தூதுபோகவிடுவாரைக் கிடையாமையாலே இராமன் தூதுபோகப் பெற்றிலனத்தனை; அந்த அவதாரத்திலே திருவடி அங்குமிங்கும் போவது வருவதாய்க் கொண்டு தூதக்ருத்யஞ் செய்து வார்த்தை சொல்லித்திரிந்த ஏற்றத்தைக்கண்டு 'நாமும் இப்படி ஆச்ரிதர்களுக்காகத் தூதுபோகப் பெற்றிலோமே' என்று திருவுள்ளம் குறைபட்டு அக்குறை தீருகைக்காகவே பின்னை இழிகுலத்திலே வந்து பிறந்து தூது சென்றான்; க்ஷத்ரியனென்று நிச்சயிக்கில் தூது போகவிடமாட்டார்களென்று அத்தை மறைத்து வளர்ந்தான் காணும்; அபிஷிக்த க்ஷத்ரிய குலத்திலே பிறந்தால் 'தூது போ' என்று ஏவ ஒருவருக்கும் நா எழாதிறே" என்றருளிச்செய்தாராம். இதற்கு இப்பாசுரம் மூலமாயிருக்கும். இப்பாசுரத்தில் மற்றொரு விசேஷமும் கேளீர். "இன்னார் தூதனென நின்றான்" என்பதற்கு 'பாண்டவதூதனென்னும்படி நின்றான்' என்கிற பொருள் தவிர மற்றொரு சுவைப்பொருளுமுண்டு. அதாவது, 'இன்னார் தூதனென' — பாண்டவதூதனென்று சொல்லப்பெற்றவாறே 'நின்றான்'—இனி அவதாரம் செய்ய வேண்டா என்று அவதாரங்களையொழிந்து நின்றான். க்ருஷ்ணாவதாரஞ் செய்தது தூதனென்று பேர் பெறுவதற்கேயென்பதும், அது பெற்றதனால் பரமஸந்தோஷமடைந்தானென்பதும் இதனால் தேறுகிறது. இவ்வவதாரத்திற்குப் பிறகு வேறு அவதாரம் இன்னும் செய்தருளாமையால் 'நின்றான்' என்றதற்கு 'வேறு அவதாரம்செய்யாமல் நின்றான்' என்ற பொருள் ஏற்கும்.

## 33. இன்றுயாம் வந்தோமிரங்கு

திருப்பாவையில் 'அன்றிவ்வுலக மளந்தாய்' பாசுரத்தில் ஈற்றடி இது. 'இன்றுயாம் வந்தோம்' என்று ஸேவிக்கிறோம். இன்று, யாம் என்று பதவிபாகமானாலும் இலக்கணப்படி உச்சரிக்கவேண்டிய விதம் யாதெனில் 'இன்றியாம்' என்றே உச்சரிக்கவேண்டும். நன்னூலில் 'உயிர்வரினுக்குறள் மெய்விட்டோடும். யவ்வரின் இய்யாம்' என்பது சூத்திரம். மற்று, யாது—இவ்விரண்டு சொற்கள் புணருமிடத்து மற்றியாது என்றே புணரும். உகரம் இகரமாக மாறியேதீரும். ஆழ்வார்களின் பாசுரங்களில் எங்கும் இந்த விதி வழுவாமையைக் காணலாம். 'கண்டதோடு பட்டதல்லால் காதல் மற்றியாது மில்லை' இத்யாதி பல காணலாம். ஆகவே இன்றியாம் என்பதுதான் மூலம். அதை 'இன்று யாம்' என்று பிரிப்பது போல 'இன்றி, யாம்' என்றும் பிரிக்கக் குறையில்லை. இன்றி என்பதற்கு 'உபாயமும் உபேயமும் வேறின்றி என்று பொருள். இதுவும் ப்ரக்ருதத்தில் சொல்லவேண்டிய அர்த்தமேயாகும்.

## 34. இப்பொழுதெம்மனோரால் இயம்புதற்கெளிதோ

கம்பராமாயணத்தில் அயோத்தியா காண்டத்தில் கைகேசி சூழ்வினைப் படலத்தில் 108-ஆம் பாட்டு "இப்பொழுதெம்மனோரா லியம்புதற்கெளிதோ யாருஞ் செப்பருங்குணத்திராமன் திருமுகச்செவ்வி நோக்கின் ஒப்பதே முன்பு, பின்பு வாசக

முரைக்கக்கேட்ட அப்பொழுதலர்ந்த செந்தாமரையினை வென்றதம்மா'என்பது. சக்ரவர்த்தி பாரித்த இராமபிரானது இளவரசு பட்டாபிஷேகத்துக்கு இடையூறுவிளைத்த கைகேசி தன்னருகே வந்துசேர்ந்த இராமனை நோக்கி 'நீவனவாஸம் செய்யக்கடவை' என்று கட்டளையிட்ட காலத்து இராமனுக்கு வருத்தமுண்டாகியிருக்கக்கூடுமென்று சிலர் எண்ணகூடுமன்றோ ? உண்மையில் சிறிதும் வருத்தமுண்டாகாததோடு பரம ஸந்தோஷமே உண்டாயிற்றென்பதை வான்மீகி முனிவர் ''வநவாஸோ மஹோதய:'' என்று இளையபெருமாளை நோக்கிச் சொன்ன சொல்லால் தெரிவித்தார். பெரியாழ்வாரும் தமது திருமொழியில் (3-9-4) ''கூற்றுத்தாய் சொல்லக் கொடிய வனம் போன சீற்றமிலாதானைப் பாடிப்பற'' என்றார். இதில் '' சீற்றமிலாதான் '' என்றது உயிரானது. இவற்றிற் காட்டிலும் மிக மேம்பாடாகக் கம்பர் தெரிவிக்கிறார். 'வநவாஸ ப்ரஸ்தாவம் வந்தகாலத்தில் இராமபிரானுடைய திருமுக மண்டலம் இருந்தவிதத்தை அக்காலத்தில் நேரில் கண்டவர்கள் எடுத்துரைக்க வேணுமேயல்லது, எத்தனையோ ஆயிரக்கணக்கான ஆண்டுகட்கு அப்பால் இன்று பிறந்துள்ள நானு அதைச் சொல்லுவது!' என்று கையொழிந்து ஏடுகளைக்கட்டி உள்ளே வைத்திட்டுச் சயனித்தாராம் கம்பர்; இராமபிரான் கனவிலே தோன்றி வனவாஸக் கட்டளைக்கு முன்பிருந்த முகஸந்நிவேசத்தையும் பின்பிருந்த முக ஸந்நிவேசத்தையும் காட்டிக்கொடுக்க, உடனே துயிலெழுந்து செய்யுளைப் பூர்த்திசெய்தாரென்று ஓர் ஐதிஹ்யம் சொல்லப்படுவதுண்டு. ''சந்த்ரகாந்தாநநம் ராமம்'' (வா. ஸ்ரீராமாயண. அயோத்தி. 3-28) என்கிற ச்லோகத்திற்கு ''சந்த்ரவத் காந்தம் ஆநநம் யஸ்ய'' என்றொரு விக்ரஹமும், ''சந்த்ராத் காந்தம் ஆநநம் யஸ்ய'' என்று மற்றொரு விக்ரஹமும் சொல்லுவதுண்டு. சந்திரன்போல் அழகிய முகமுடையவன் என்பது முந்தின விக்ரஹ வாக்யத்தின் பொருள்; சந்திரனிற்காட்டிலும் மிகவழகிய முகமுடையவன் என்பது பிந்தின விக்ரஹ வாக்யத்தின் பொருள். வநவாஸ ப்ரஸ்தாவமில்லாதிருந்த காலத்தில் முந்தின விக்ரஹப்பொருள் அவகாசம் பெற்றிருந்தது; வனவாஸக் கட்டளை விளைந்தவுடனே பிந்தின விக்ரஹப் பொருள் அவகாசம் பெற்றது என்று கொள்க............

## 35. ஈசன்வானவர்க்கென்பன் என்றால் அது தேசமோ?

திருவாய்மொழி மூன்றாம்பத்தில் ஒழிவில்காலப்பதிகத்தில் நாலாம்பாட்டு 'ஈசன் வானவர்க்கென்பனென்றால் அது தேசமோ திருவேங்கடத்தானுக்கு? நீசனேன் நிறையொன்றுமிலேன் என்கண் பாசம் வைத்த பரஞ்சுடர்ச் சோதிக்கே.' என்பது. இப்பாசுரம் அநுபவ ரஸிகர்களுக்குப் பரமபோக்யமானது. இதன் கருத்தைக் கேளீர். 'எண்ணில் தொல்புகழ் வானவரீசன்' என்றார் கீழ்ப்பாட்டில்; அதனால் நித்யஸூரிகளுக்குத் தன்னை அநுபவிக்கக் கொடுத்தானென்பதை ஒரேற்றமாக அருளிச்செய்தார்; மிகவும் நீசனான என் பக்கலிலே பாசம் வைத்திருக்குமப் பெருமானுக்கு அது ஓர் ஏற்றமோ என்கிறாரிப்பாட்டில். 'வானவர்க்கு ஈசன்' என்று சொல்லுகிறது திருவேங்கடத்தானுக்குத் தேசமோ? என்கிறார். *கானமும் வானரமும் வேடுமான விவற்றுக்கு முகங்கொடுத்துக் கொண்டு நிற்கிறவன் நித்யஸூரிகட்கு முகங்கொடுக்கிறானென்பது எங்ஙனே ஏற்றமாகும்? *அயர்வறுமமரர்களதிபதி என்கை ஸ்ரீவைகுண்டநாதனுக்கு ஏற்றமாகுமத்தனையல்லது திருவேங்கட

முடையானுக்கு ஏற்றமாகாது காணும். அஃது ஏற்றமன்றாகில், பின்னை எதைத் திருவேங்கடமுடையானுக்கு ஏற்றமாக நீர் நினைக்கின்றீர்? என்ன; அதற்கு விடையளிக்கின்றார் போலும் பின்னடிகளால்* அமர்யாத:க்ஷுத்ரச்சலமதிரஸூயாப்ரஸவபூ: இத்யாதிப் புடைகளிலே ஆளவந்தார் போல்வார் அருளிச்செய்கிற கணக்கிலே மிகவும் நிஹீனனான என்திறத்தில் ஆசாபாசம் வைத்து அதனால் புகர் படைத்திருக்கின்ற எம்பெருமானை வானவரீசன் என்பது என்ன பெருமை! என்றாராயிற்று.

## 36. ஈக்கள் வண்டொடு மொய்ப்பவரம்பிசந்து

இது கம்பராமாயணம் பாலகாண்டத்தில் ஆற்றுப் படலத்தில் ஒரு செய்யுள். பெரிய திருமொழியில் 'வாடினேன் வாடி' பதிகத்தின் ஈற்றுப் பாசுரத்தில் ''மஞ்சுலாஞ் சோலை வண்டறை மாநீர்'' என்றுள்ளது. வண்டுகள் பூங்கொத்துக்களில் மொய்க்குமேயல்லது நீரிலே மொய்க்குமா என்றொரு சங்கை தோன்றக்கூடுமென்று நினைத்த பெரியவாச்சான்பிள்ளை அப்பாசுரத்தின் தமது வியாக்கியானத்தில், ''ஜலத்தினுடைய ரஸ்யதையாலே 'ஈக்கள் வண்டொடு மொய்ப்ப' வென்று ஆற்று வரவுகளிலே சொல்லுவர்களாய்த்து தமிழர்'' என்று அருளிச்செய்துள்ளார். இங்குத் தமிழர் என்றது கம்பரை. அவருடைய பாட்டு ''ஈக்கள் வண்டொடு மொய்ப்ப வரம்பிசந்து ஊக்கமே மிக உள் தெளிவின்றியே, தேக்கெறிந்து வருதலின் தீம்புனல் வாக்குந் தேனுகர் மாக்களை மானுமே'' என்பதாம்.

## 37. உன்னதென்னதாவியும் என்னதுன்னதாவியும்

திருவாய்மொழியில் (4-3-8) *என்னதாவிமேலையாய்* என்கிற பாட்டின் மூன்றுமடி யிது. இங்கு ஆளவந்தாருடைய அற்புதமான வருளிச்செயல் ஈட்டில் எடுத்துக்காட்டப்பட்டுள்ளது. (அதன் ஸாரமாவது.) 'என்னதாவி உன்னது' என்பது முதலிலுள்ளது. ஜீவாத்ம ஸ்வரூபம் பரமாத்மாவுக்கு அதீனம் என்பது இதனால் விளங்கிற்று. உடனே 'உன்னதாவி என்னது' என்றுள்ளது. இதனால் பரமாத்ம ஸ்வரூபம் ஜீவாத்மாவுக்கு அதீனம் என்று தெரிவிக்கப்பட்டதாகிறது. ஆராயுமளவில் முதலிற் சொன்னது பொருந்துமேயன்றி இரண்டாவதாகச் சொன்னது பொருந்த வழியில்லை. ஏனென்றால் ஜீவாத்மஸ்வரூபம் பரமாத்மாதீனம் என்பது நிர்விவாதம். பரமாத்மஸ்வரூபம் ஜீவாத்மாதீனம் என்பது இசையக்கூடிய விஷயமன்றே. ஆகவே இது பொருந்ாதென்று சந்தேகிக்க இடமுண்டாகிறது. ஆளவந்தார் கோஷ்டியில் திருவாய்மொழி கேட்டுவந்த சிஷ்யர்கள் ஆளவந்தார் திருவடிகளிலே இந்த ஆக்ஷேபத்தை விண்ணப்பஞ் செய்தார்கள். அதற்கு ஆளவந்தார் அருளிச் செய்தது மிகமிகச் சுவைமிக்கது. ஜீவாத்மஸ்வரூபம் பரமாத்மாதீனம் என்பது உண்மையே. ஆனால் அவன் 'த்வம் மே' என்றால் இவன் 'அஹம் மே' என்பவன் ஆகையாலே அதற்குத் தடையேற்பட்டு விடுகிறது. அது கருமத்தினாலானது. பரமாத்மா தன்னுடைய ஸ்வாதந்த்ர்யத்தாலும் கருணையினாலும் ஜீவாத்மாவுக்கு அதீனனாகிறபோது தடை செய்வாரில்லையே. சிஷ்யர்களே! நீங்கள் 'உன்னதென்னதாவியும்' என்பதிலே ஆக்ஷேபம் காட்டவேணுமேயொழிய 'என்ன துன்னதாவியும்' என்பதிலே ஆக்ஷேபம் காட்ட இடமில்லையே' என்று அருளிச்செய்தார். 'அநந்யாதீனத்வம் தவ கில ஜகுர் வைதிககிர: பராதீனம் த்வாம் து ப்ரணத பரதந்த்ம் மநுமஹே'' என்ற ஆழ்வான் ஸ்ரீஸூக்தியை இங்கே இணைக்கிக்கொள்வது.

## 38. உண்ணுஞ்சோறு பருகுநீர் ... எல்லாம் கண்ணன்

இப்பதிகம் (திருவாய்மொழி 6-7) தாய் பாசுரமாக அவதரித்தது. தாய் பாசுரமாக வைத்துப் பேசுபவர் ஆழ்வாரே யாதலால் தம்முடைய படியைத் தாமே தெரிவிப்பதாகும். ஆசார்யஹ்ருதயத்தில் வ்யாஸ பராசராதி மஹர்ஷிகளுக்கும் ஆழ்வார்க்குமுள்ள வாசியை விரிவாக அருளிச்செய்து வருமிடத்து "அவர்களுக்குக் காயோடென்னு மிவையே தாரகாதிகள்; இவர்க்கு எல்லாம் கண்ணனிறே" என்றருளிச்செய்த சூர்ணையை உரையுடன் இங்கு அநுபவிப்பது. இங்கே ஆக்ஷேப ஸமாதானம் குறிக்கொள்ளத்தக்கது. உண்ணாத சோறு முண்டோ? பருகாத நீருமுண்டோ? தின்னாத வெற்றிலையு முண்டோ? எதற்காக இந்த அடைமொழிகள் கொடுப்பது? பாதபூரணத்திற்காகவா? என்று சிலர் கேட்கலாம். வ்யாக்யானத்திலுள்ள அழகைக் காட்டுகின்றோம். சோறு எப்போதும் உண்ணுஞ்சோறாகவிராது. வயிறு நிறைய உண்டவனுக்கு தேவாம்ருதம் கிடைத்தாலும் அது உபேக்ஷணீயமாகவே யிருக்கும். கங்கைக் கரையிலுள்ளவனுக்குக் குளத்துநீர் அநபேக்ஷிதமா யிருக்கும். வாய்நிறைய வெற்றிலையைக் குதப்பியுள்ளவனுக்கு வேறு வெற்றிலை தின்னும் வெற்றிலையாக இராது. ஆகவே. "உண்ணுஞ்சோறு" என்றது பசித்தவன் விரும்பியுண்ணுஞ்சோறு என்றபடி. 'பருகும் நீர்' என்றது பாலைவனத்தில் திரிந்து நாக்கு ஒட்டிப்போனவன் விரும்பிப் பருகும் நீர் என்றபடி. 'தின்னும் வெற்றிலை' என்றது நாவில் பசையற்று வறண்டு கிடப்பவன் விரும்பித்தின்னும் வெற்றிலை என்றபடி. ஆழ்வார் எம்பெருமானை அனுபவிப்பது இவ்வகையிலேயாம்.

## 39. உடையவரின் கீதாபாஷ்யத்தினழகு (ப்ராஸங்கிகம்)

கீதையில் ஏழாமத்யாயத்தில் 'வாஸுதேவஸ் ஸர்வமிதி ஸ மஹாத்மா ஸுதுர்லப:' என்றவிடத்து 'வாஸுதேவஸ் ஸர்வம்' என்றதற்கு சங்கரபாஷ்யத்தையும் நம் ஸ்வாமி பாஷ்யத்தையும் உற்று நோக்கவேணும். *வாஸுதேவஸ் ஸர்வமிதி ஸ மஹாத்மா ஸுதுர்லப:* என்பதற்கு சங்கரர் பணித்த பொருள் *ஸர்வம் கல்விதம் ப்ரஹ்ம* இத்யாதி ஸ்தலங்களில் போலவே அத்வைதமாகவுள்ளது; 'வாஸுதேவ ஏவ மம ஸர்வம்' என்பதாகக் கொள்ளப்படவேயில்லை. பரப்ரஹ்மத்திற் காட்டில் வேறுபட்ட பொருள் எதுவுமேயில்லையாகையாலே, எல்லாம் ப்ரஹ்மமேயென்று கொண்டு என்னைப் பணிகின்ற மஹாத்மா துர்லபன்-என்று கீதாசார்யன் சொல்லுவதாக சங்கர பாஷ்ய ப்ரக்ரியை. இதை நமது பாஷ்யகாரர் கண்டித்திருக்கிறாரென்பது "வாஸுதேவஸ் ஸர்வமித்யஸ்ய அயமேவார்த்த:" என்கிற ததீயபாஷ்ய ஸூக்தியாலும், "வாஸுதேவஸ்ஸர்வமிதி ஸாமாநாதிகரண்யஸ்ய பராபிமதமர்த்தம் ப்ரதிக்ஷிபந் ஸ்வோக்தம் த்ரடயதி-வாஸுதேவ இதி" என்கிற தாத்பர்யசந்த்ரிகா ஸூக்தியாலும் அறிய வெளிது. இங்கு சங்கரர் பணித்த பொருளானது அவசியம் கண்டிக்கத்தகுந்தது தானோவென்று பார்க்கவேணும். ஸர்வவஸ்து ஸாமாநாதிகரண்யார்ஹத்வரூபவஸ்து பரிச்சேதராஹித்யத்தை ப்ரஹ்மத்தினிடத்தில் விசிஷ்டாத்வைதிகளான நாமும் இசைந்தே யிருக்கிறோம். தாத்பர்யநிர்வாஹத்தில் வாசியேயொழிய சப்தஸந்தர்ப்

பத்தில் ஒரு வாசியுமில்லை நமக்கும். இங்கே சங்கரர் எழுதிவைத்த பொருள் அஸம்பாவிதமன்று. *ஸ ப்ரஹ்மா ஸ சிவஸ்ஸேந்த்ரஸ் ஸோக்ஷர: பரமஸ் ஸ்வராட்* என்கிற வடமொழி வேதத்தையும், *அவனே யவனுமவனுமவனும், அவனே மற்றெல்லாமுமறிந்தனமே* என்கிற தமிழ் வேதத்தையும் நிர்வஹிக்கிற ரீதியிலே *வாஸுதேவஸ் ஸர்வமென்கிற விதையும் எளிதாக நிர்வஹிக்கலாமாயிருக்க இங்கே கண்டனம் அவச்யமன்றேயென்று ப்ரத்யவஸ்தாநம் ப்ராப்தமாகும்.

சங்கரருடைய அத்வைதாபிப்ராயத்தை ஸ்வாமி கீழே வெகு விரிவாகக் கண்டித்தே யிருக்கிறார். [2-12 பாஷ்யம் ஸேவிப்பது. 13-2 பாஷ்யத்திலும் மிகமிக விரிவாக ஸேவிப்பது.] அதை இங்கும் கண்டிக்கவேண்டிய அவச்யமில்லைதான். இங்குக் கண்டிக்கிற விதம் வேறு. இவ்வர்த்தம் இந்த ப்ரகரணத்திற்குச் சேராதென்று திருவுள்ளம்பற்றியே இவ்விடத்தில் ப்ரதிக்ஷேபமுள்ளது. இங்கே ஸ்வாமியருளிச்செய்த பொருள் என்னவென்று பார்ப்போம். 'வாஸுதேவஸ் ஸர்வ' மென்பதற்கு ஸ்வாமியருளிய பொருள் இதுவே—வாஸுதேவ ஏவ மம பரமப்ராப்யம் ப்ராபகஞ்ச, அந்யதபி யந்மநோரதவர்த்தி ஸ ஏவ மம தத் ஸர்வம்'' என்பது கீதா பாஷ்யஸூக்தி. இதை தாத்பர்ய சந்த்ரிகையில் விவரிக்கும்போது தாரகபோஷக போக்யங்களும் எம்பெருமானே யென்று கொள்ளுகிற மஹாத்மாவை விவக்ஷிப்பதுதான் இவ்விடத்திற்குச்சேரும்-என்று ஸ்பஷ்டமாக எழுதியுள்ளார். திருவாய்மொழியில் *உண்ணுஞ்சோறு பருகுநீர் தின்னும் வெற்றிலையுமெல்லாம் கண்ணன்* என்று ஆழ்வாரருளிச்செய்தது *வாஸுதேவஸ்ஸர்வமென்கிற இத்தையநுஸரித்தேயென்று ஆளவந்தார் முதலானோர் நிர்வஹித்து வந்தார்கள். திருவாய்மொழியின் வ்யாக்யாதாக்களான பூர்வாசார்யர்களும் அங்கு இந்த கீதாவசனத்தை யுதாஹரித்தே வியாக்கியானம் செய்தருளியுள்ளார்கள். சங்கரருக்குத் திருவாய்மொழியில் ப்ரவேசமில்லாமையாலே அவர்தாம் வேறு வகையாக பாஷ்யமிட்டாலும் திருவாய்மொழியமுதக் கடலிலே ஆழ்ந்தவரான ஸ்வாமி அவ்வர்த்தத்தை எங்ஙனே இசையக்கூடும்? *வாஸுதேவஸ் ஸர்வமிதி ஸ மஹாத்மா ஸுதுர்லப:* என்று சொல்லுகிற கீதாசார்யனும் நம்மாழ்வாரை நெஞ்சில் கொண்டே அது சொல்லியிருக்க, அதற்கு இணங்காத பொருள் ஸ்வாமிபாஷ்யத்தில் எப்படி இடம் பெறும்? அப்பொருளை ஸ்வாமி எப்படி ஸஹிப்பர்? தமக்கு *எல்லாங் கண்ணனென்று சொல்லுகிற மஹாத்மாவாகிய நம்மாழ்வார், அந்தோ! என் கண்ணுக்குக் கிடைக்கவில்லையே யென்று அழுதுகொண்டே யன்றோ கீதாசார்யன் இந்த ச்லோகம் பணித்தான். கண்ணன் தன்னடிச்சோதிக்கு எழுந்தருளின பின் சிலநாளிலே ஆழ்வாருடைய திருவவதாரம். கண்ணபிரான் ஆழ்வாரை ஸேவித்துவிட்டுத் தன் அவதார ஸமாப்தியைச் செய்துகொள்ள மிகவும் ஆசைப்பட்டிருந்தான்; அந்த பாக்யம் அவனுக்கு துர்லபமாயிற்று; அது இந்த ச்லோகத்தில் *ஸ மஹாத்மா ஸுதுர்லப:* என்பதனாலே ஸூசிதமாகிறது—என்று ஆசார்யர்கள் நிர்வஹித்துப்போருவது ஸோபபத்திகமென்று கீதாபாஷ்ய ஸூக்திகளாலறிகிறோம். ஆக, 'ஜகத் ஸர்வம் வாஸுதேவ:' என்பதாக சங்கரர் கொண்டார்; அங்ஙனன்றிக்கே 'மம ஸர்வம் வாஸுதேவ:' என்பதாக நம் ஸ்வாமி கொண்டார். இதுதான் திருவாய்மொழிக்குச் சேர்ந்ததும், திருவாய்மொழியிலிருந்து தெரிந்து அருளிச் செய்யப்பட்டதுமான ச்சிறந்த பொருள் என்று தெளிவிக்கப்பட்டதாயிற்று.

## 40. உப்பானுலுமவன் கொடுப்பன்

உலகில் பாஷைகள் பல. அந்தந்த பாஷைகளில் கவிதைகள் தோன்றியுள்ளன. மணிப்ரவாள பாஷையென்பது ஸ்ரீவைஷ்ணவ ஸம்ப்ரதாயத்தில் தோன்றியுள்ளது. ஆழ்வார்களருளிச் செய்தவை வெறுந்தமிழ். ஆசாரியர்களருளிச் செய்த ஸ்ரீபாஷ்யாதிகளும் ஸ்தோத்ரங்களும் வெறும் ஸம்ஸ்க்ருதம். திவ்யப்ரபந்த வியாக்கியான ரஹஸ்யாதிகள் வடமொழியும் தென்மொழியும் விரவிய மணிப்ரவாளநடை. வசனநடையிலமைந்துள்ள மணிப்ரவாள நூல்களையே பெரும்பாலும் அநுபவித்து வருகிறோம். மணிப்ரவாள ச்லோகங்களுமுண்டு. அவை கர்ணாம்ருதமாயிருக்கும். கற்கண்டும் பாலும் கலந்தாற்போலேயிருக்கும். அவற்றுள் ஒன்று கேளீரிங்கு. ''உப்பானுலுமவன் கொடுப்பனிதி நான் நப்பாசையால் கிட்டினேன், துப்பாமல் ஸ து மாம் த்ருணாய கலயந் அப்பால் வ்ரஜேத்யப்ரவீத், இப்பாலெங்கு திரிந்துமில்லை யெனவே தப்பாத சொல் பெற்றனன், அப்பா! வாமனனே மஹாபலிமகே எப்பாடு நீ பட்டையோ?'' இதன் பொருள் எளிதாகத் தெரிந்ததே. [இந்நூல் என்னுயுள்வரை என்றும் முடிவுபெற மாட்டாததாகையாலே இங்ஙனேயுள்ளவை மேன்மேலும் பலபல வெளிவரும்.]

## 41. உத்தமர் கோவிலின் உத்தம விசேஷம்

திருவரங்கம் பெரிய கோயில் ஸமீபத்தில் உத்தமர் கோயில் என்பது ஒரு திவ்யதேசம். அத்திருப்பதிக்குக் கரம்பனூர் என்று திருநாமம். திருமங்கையாழ்வார் ஒருவருடைய பாடலே அதற்குள்ளது. பெரிய திருமொழி(5-6-2)'கரம்பனூருத்தமனை' என்பதாம் அது. சில திவ்யதேசங்களில் புருஷோத்தமன் என்று திருநாமங் கொள்வது போல அத்தலத்தெம்பெருமான் உத்தமன் என்றே திருநாமங் கொண்டார். 'உத்தம: புருஷஸ்த்வந்ய: பரமாத்மேதி உதாஹ்ருத:' என்பது கீதை. எம்பெருமானை உத்தமனென்றால் எதனாலுத்தமனென்று கேள்வி பிறக்குமோ? கேள்வி பிறவாது. இங்குப் பெரியவாச்சான்பிள்ளை வ்யாக்யானத்தில் அருளிச் செய்யும் ஸ்ரீஸூக்தியாவது-'வழிக்கரையிலே திருவாசலுக்கு ஒரு கதவிடாதே வந்துகிடக்கிறவனை' என்பது. இதன் தாற்பரியமென்னவென்றால், அக்காலத்தில் அந்த ஸன்னிதிக்கு உபபத்தியின் குறைவினால் கோபுர வாசலுக்குக் கதவு திருப்பணி ஏற்படாமல் எப்போதும் திறந்தபடியாகவேயிருந்தது. யாரும் உள்ளே எளிதாக நுழையலாமன்றோ? இதை அர்ச்சாவதார ஸௌலப்யத்தின் எல்லையாகத் திருவுள்ளம்பற்றிய பெரியவாச்சான்பிள்ளை ரஸோக்தியாகத் 'திருவாசலுக்குக் கதவிடாதேயிருக்கிற ஸௌலப்யத்தினால் உத்தமன்' என்று ஸாதித்தபடி. இச்சுவையை அறியகில்லாத அரும்பதவுரைகாரர் ஒருவர் 'எல்லாரும் நடக்கிற வழியாகையாலே ஸேவிப்பார் மிகுகையால் கதவிட அவஸரமில்லை என்று கருத்து' என்று எழுதிவைத்தார். இது மிகவும் விரஸமானது என்று அஸ்மதாசார்யர் குறிப்பாக அருளிச் செய்தபடி.

## 42. உயிருண்டாகும் வகையுண்டோ

இது கம்பராமாயணத்தில் ஒரு செய்யுளின் முடிவு. இராமபிரான் பிராட்டியைப் பிரிந்து வனத்தில் பரிதபிக்கும்போது அந்த பரிதாப வகைகளை வான்

மீகி சொன்னது ஏகதேசம். கம்பர் வெகுவிரிவாகக் கூறியுள்ளாரதனை. இச் செய்யுள் கேண்மின். 'வெள்ளஞ்சிலம்பும் பாற்கடலின் விரும்புந் துயிலை வெறுத் தளியுங் கள்ளுஞ் சிலம்பும் பூங்கோதை காதற் கடலிற் படிவாற்குப் புள்ளுஞ் சிலம்பும் பொழில் சிலம்பும் புனலுஞ் சிலம்பும் புனைகோதை உள்ளுஞ் சிலம்பும் சிலம்பாவால் உயிருண்டாதும் வகையுண்டோ?' இங்குச் சிறிது கேண்மின். வான்மீகிக்கும் கம்பர்க்கும் ஒரு வாசியுள்ளது. வான்மீகி இராம பிரானை ஒரு மனிதனாகவே வைத்துத் தமது நூலை முடித்துள்ளார். ஆனாலும் ஸமுத்ரசரணாகதிப்ரகரணத்தில் 'புஜை: பரம நாரீணாம் அபிம்ருஷ்டம் அநேகதா' என்பது போன்ற சிற்சிலவிடங்களில் மட்டும் இராமன் ஸாக்ஷாத் நாராயணமூர்த்தி என்பதை வ்யங்க்யமாகக் காட்டியுள்ளார். கம்பர்பெருமான் அங்ஙனன்றிக்கே ராமன் நாராயணமூர்த்தி என்பதை வ்யக்தமாகவே அடிக்கடி காட்டியருளுவார். இச்செய்யுளில் முதலடியையும் இரண்டாமடியையும் உற்று நோக்க வேணும். பாற்கடலில் அமர்ந்திருந்தவர் பிராட்டியுடைய காதற்கடலிலே அமர்ந்தார் என்று சொல்லியிருக்குமழகு ரஸிக்கத்தக்கது. க்ஷீரார்ணவ நிகேதநரான நாராயணனே இராமனாகத் திருவவதரித்து ஸீதாபதியானான் என்பதை விளங்கக் காட்டினாராயிற்று. பின்னடிகளின் அமைப்பு மிக்க சுவைமிக்கது. அதில் 'உயிருண்டாகும் வகையுண்டோ?' என்கிற விடத்தை என்னுடைய மாதாமஹரான அழகியமணவாள ஜீயர் ஸ்வாமி எனக்குப் பாடம் சொல்லும் போது அரைமணிகாலம் அழுதுகொண்டேயிருந்தார். அது இன்றைக்கு அறுபத்தாறு வருஷமாகிறது.........

## 43. உருமாறிப்பலபிறப்பும்

திவ்யகவி பிள்ளைப்பெருமாள் ஐயங்காருடைய திருவரங்கர் ஊசற்பாவில் இது ஒரு செய்யுள். திவ்யகவி பிள்ளைப்பெருமாள் ஐயங்கார் திருச்சியில் ஒரு ஜமீன்தாரிடத்தில் வேலை பார்த்து வந்தார். ஒரு ஸமயம் (ஐப்பசி மாதத்தில்) ஸ்ரீரங்கநாதனுக்கு ஊஞ்சலுத்ஸவம் நடந்து கொண்டிருக்கிறது. ஐயங்கார் உடனிருந்து ஸேவிக்க முடியாமல் காரியநிர்ப்பந்தத்திலிருந்தார். இவருடைய நினைவெல்லாம் அந்த உத்ஸவத்திலேயே அமர்ந்திருந்தது. அதனால் ஜமீன் தாருக்கு ஏதோ கணக்கெழுதுகிற வ்யாஜங் காட்டி ரங்கநாதனுடைய ஊசல் நூலொன்று எழுதினார். அதில் முதற்பாட்டு 'உருமாறிப்பலபிறப்பும் பிறந்தும் செத்தும் ஊசலாடுவதடியேன் ஒழியும் வண்ணம் கருமாயத் தென்னெஞ்சைப் பலகையாக்கிக் கருணையெனும் பாசத்தைக் கயிறுப்பூட்டி மருமாலைத் துளவசைய வாடிரூசல் மணிமகரக் குழையசைய ஆடிரூசல் திருமாது புவிமாதோடாடிரூசல் திருவரங்கராசரே யாடிரூசல்' என்பது. இதிலுள்ள சமத்காரம் மிக வியக்கத்தக்கது. ஸ்ரீரங்கநாதா! ஊசலுத்ஸவம் உனக்குக் கதாசித். எனக்கோ அது நிச்சலும் நடந்துகொண்டிருக்கிறது. ஊசலாவது அப்படியும் இப்படியும் அசைவது தானே! நான் அநுபவிக்கும் ஊசலாவது உருமாறிப் பல பிறப்பும் பிறந்தும் செத்தும் போருகை; "ஏவம் ஸம்ஸ்ருதி சக்ரஸ்தே ப்ராம்யமாணே ஸ்வகர்மபி:, ஜீவே துக்காகுலே விஷ்ணோ: க்ருபா காப்யுபஜாயதே." என்கிற ப்ரமாண வசனத்தை நினைப்பூட்டினாராயிற்று.

# அபூர்வார்த்த ரத்னநிதி

(முன் தொடர்ச்சி)

## 44. உன்னுமவர்க்குள்ளமுருகும்

திருவாய்மொழி நூற்றந்தாதியில் இன்னுயிர்ச்சேவலும் என்ற திருவாய்மொழிப் பதிகத்திற்கு ஸாரார்த்த ஸங்க்ரஹமாக இட்டருளின "இன்னுயிர் மால் தோற்றினது" என்கிற பாசுரத்தின் ஈற்றடி உன்னுமவர்க்குள்ளமுருகும் என்றது. வெண்பாவின் ஈற்றடியெல்லாம் முற்றுயிர் கொண்டது என்பது உலகமறிந்தது. இவ்வீற்றடியைச் சீர் பிரிக்கும்போது உன்னுமவர்க் குள்ள-முருகும் என்று முற்றுகப் பிரிப்பர் பலர். இங்ஙனே பிரிப்பதில் வெண்டளை பிறழாமலிருந்தாலும் ஈற்றுச்சீர் இலக்கண விதிக்கு ஒவ்வாது. ஏனெனில், ஈற்றுச்சீரின் வாய்பாடு நாள், மலர், காசு, பிறப்பு என்பதாம். ஈற்றுச்சீரை ஈரசைச் சீராகக் கொண்டால் உகர வீற்றதாகவே இருக்க வேண்டும். 'உருகும்' என்றிருக்கத் தகாது. உருகு என்றிருக்கலாம். அது பொருட்குப் பொருந்தாது. ஆகவே இடைச்சீரை உள்ளமுரு என்று கூவிளங்காய்ச் சீராகப் பிரித்துக்கொண்டு (கும்) என்னுமெழுத்தை 'நாள்' என்னும் வாய்பாட்டுக்குறுப்பாகக் கடைச்சீராகப் பிரித்துக்கொள்ள வேண்டும். இப்படியே அந்த நூற்றந்தாதி தன்னிலேயே எங்காதலுக்கடி என்கிற பாசுரத்தின் ஈற்றடி "உள்ளினர்க்குத் தீங்கை யறுக்கும்" என்பதாம். அதிலும் 'அறுக்கும்' என்பதைக் கடைச் சீராகப் பிரிக்கலாகாது. (கும்) என்பதையே கடைச்சீராகக் கொள்ளவேண்டும். இதுதான் இலக்கணவழிக்குப் பொருந்தும். "குன்றிவிடுமே பவக்கங் குல்" "பாடணைவார்க் குண்டாமின் பம்" "துன்புற்றுன் மாறனந் தோ" "வன்மையடைந்தான் கேசவன்" என்றிவை முதலான அடிகளில் (குல்) (பம்) (தோ) (வன்) என்னுமிவை கடைச்சீராக வருதல் காண்க.

## 45. ஊற்றின் கண் நுண்மணல்போல் உருகாநிற்பர் நீராயே

திருவாய்மொழியில் *பொன்னுலகாளீரோ* என்கிற பதிகத்திற்குப் பயனுரைக்கும் பாசுரமான *மாற்றங்களாய்ந்து கொண்டு* என்கிற பாசுரத்தின் ஈற்றடியிது. இப்பதிகம் கற்றார்க்குப் பயனுரைப்பதாமிது. ஒவ்வொரு பதிகத்திற்கும் முடிவில் பயனுரைத்தருளா நின்ற ஆழ்வார் 'பெறலாகும் வானேங்கு பெருவளமே' என்றும் 'ஏதமிலாயிரத்திப்பத்து ஓதவல்லார் பிறவாரே' என்றும் 'கற்பரேல் கல்வி வாயுமே' என்றும் பெறக்கூடிய அபூர்வமானதொரு பலத்தை அருளிச்செய்து வருவதைக் காணு நின்றோம். இங்கு அப்படியன்றிக்கே, இவையுமொரு பத்தும் வல்லார் நீராயுருகா நிற்பர் என்பது பலனாகுமோ? அபூர்வ வஸ்து லாபமேயன்றோ பலனாகச் சொல்லக் கூடியது? இங்கு அபூர்வ வஸ்து லாபம் ஒன்றுமில்லையே. இது எப்படிப் பலனாகும் என்று சிலர் சங்கிப்பதுண்டு. கேண்மின். இதுதான் அபூர்வமான பலன் என்று உணர வேண்டும். அருளிச் செயலை ஓதுமவர்கள் சுஷ்கஹ்ருதயரன்றிக்கே இளகின நெஞ்சையுடையராய் நீராய் உருகி நிற்பரென்பது பலன்கள் எல்லாவற்றிலும் மேம்பட்ட பலனாகும். இப்பேறு வரப்ரஸாதமடியாகக் கிடைக்கக் கூடியதென்பது ஆழ்வார் திருவுள்ளமென்க.

## 46. எற்றைக்குமேழேழ் பிறவிக்கும்

ஆழ்வார்களெல்லாரும் பெரும்பாலும் பகவான் பக்கலிலே வேண்டினது பிறப்பறுக்கவேணுமென்று. "இனிப்பிறவியான் வேண்டேன்" என்றும் "ஆதலால் பிறவி வேண்டேன்" என்று மிப்புடைகளிலே யன்றோ ஆழ்வார்களின் பாசுரம். அப்படியிருக்க ஆண்டாள் ஒருத்தி மட்டும் பிறவியை வெறுக்காததோடு மேன் மேலும் பிறந்து கொண்டேயிருக்கவேணுமென்கிற ஆசையை வெளியிடுவதாக காட்டுமிந்தப் பாசுரத்தின் கருத்து ஆராயப்படவேண்டும். ஆராயுமளவில் ஸ்ரீவிஷ்ணு புராணத்தில் எம்பெருமானுடைய அவதாரம் தோறும் பிராட்டியும் அவதரித்தே வருகின்றாளென்பதைக் காட்டும் சுலோகங்கள் நினைவுக்கு வரும். (அதாவது) "தேவத்வே தேவதேஹேயம் மநுஷ்யத்வே ச மாநுஷீ, விஷ்ணோர்தேஹாநுரூபாம் வை கரோத்யேஷா ஆத்மநஸ்தநூம். ராகவத்வே அபவத் ஸீதா ருக்மிணீ க்ருஷ்ண ஜந்மநி, அந்யேஷு சாவதாரேஷு........" இத்யாதி சுலோகங்களினால் எம்பெருமானுடைய அவதாரங்கள் தோறும் பிராட்டியும் கூடவே அவதரிப்பது தெரிவிக்கப் படுகிறது. அவ்வண்ணமாகவே ஆண்டாள்தானும் தேவதேவ திவ்யமஹிஷியாய்க் கொண்டு அவதரிப்பவள் என்பது ஸூசிப்பிக்கப் படுகிறது. இங்கு "எற்றைக்குமென்றது தோன்றப் பிறந்து" இத்யாதியான ஆசார்யஹ்ருதய சூர்ணையை வ்யாக்கியானத்தோடு அநுஸந்திப்பது.

## 47. எட்டினுய பேதமோடிறைஞ்சிநின்று

எட்டினுயபேதமோடிறைஞ்சுகையாவது—"மநோபுத்த்யபிமாநேந ஸஹ ந்யஸ்ய தராதலே, கூர்மவச்சதுர; பாதாந் சிரஸ்தத்ரைவ பஞ்சமம்". என்றபடி ஸாஷ்டாங்கப்ரணாமம் பண்ணுகை. மேலெடுத்துக் காட்டிய சுலோகத்தில் எட்டு அங்கங்கள் காட்டப்பட்டுள்ளன. அவையாவன, இரண்டு கைகள், இரண்டு கால்கள், சிரஸ்ஸு, மனம், புத்தி, அபிமானம் என்பன. இவற்றுள் ஐந்து அங்கங்கள் ஸ்பஷ்டமாகத் தெரியுமவை. மனம் புத்தி அபிமானம் என்பவை மூன்றும் அந்த: கரண வ்ருத்தியைத் தெரிவித்தபடி. அன்றியே பாஞ்சராத்ரங்களில் அஷ்டவித பக்தி சொல்லப்பட்டுள்ளது. அதாவது, "மத்பக்தஜநவாத்ஸல்யம் பூஜாயாஞ் சாநுமோதநம், ஸ்வயமப்ப்யர்ச்சநஞ் சைவ மதர்த்தே டம்பவர்ஜனம், மத்கதா ச்ரவணே ஸக்தி: ஸ்வரநேத்ராங்கவிக்ரியா, மமாநுஸ்மரணம் நித்யம் யச்ச மாம் நோபஜீவதி, பக்திரஷ்டவிதா ஹ்யேஷா யஸ்மின் ம்லேச்சேபி வர்த்ததே தஸ்மை தேயம் ததோ க்ராஹ்யம் ஸ ச பூஜ்யோ யதா ஹ்யஹம்." (1) பகவத் பக்தர்களிடத்தில் அன்பு பூண்டிருத்தல், (2) அர்ச்சாவதாரத்தில் ஆதரம் கொண்டிருத்தல், (3) ஆளிட்டந்திதொழ வொண்ணுதென்றுப்போலே தானே பகவதாராதனம் செய்கை, (4) பகவத் கார்யங்களில் டம்பமற்றிருக்கை, (5) பகவத் கதைகளைக் கேட்பதில் ஆசைகொண்டிருக்கை, (6) "உள்ளெலாமுருகிக் குரல் தழுத்தொழிந்தேன்......கண்ணநீர் சோர" என்கிறபடியே அங்கவிகார முற்றிருக்கை, (7) எம்பெருமானை இடைவீடின்றிச் சிந்திக்கை, (8) எம்பெருமானிடத்து ஒரு பலனைக்கொள்ள விரும்பாமை. ஆகியவிவை அஷ்டவித பக்திகளாகச் சொல்லப்பட்டன. இங்கு "எட்டினுய பேதமோடிறைஞ்சி நின்று" என்பதனால் அதுவும்

விவக்ஷிதமாகலாம். திருமாலையில் "பழுதிலாவொழுகலாற்று" என்கிற பாசுரத்தில் "நின்னோடுமொக்க வழிபடவருளினாய்" என்றவிடத்தில் இந்த ப்ரமாண வசனங்கள் உட்கொள்ளப்பட்டிருக்கின்றன. இதில் "ஸ ச பூஜ்யோ யதா ஹ்யஹம்" என்றதையே, 'நின்னோடுமொக்க வழிபடவருளினாய்' என்று ஆழ்வார் மொழிபெயர்த்தார்.

## 48. எட்டினோடிரண்டெனும் கயிற்றினால் மனந்தனை

இது திருச்சந்த விருத்தத்தில் 83-ம் பாசுரத்தின் மூன்றாமடி. இதில் எட்டுமிரண்டுமாகிற கயிற்றினால் மனத்தைக் கட்டவேணுமென்று சொல்லப்படுகிறது. உலகத்தில் ஒன்றைக் கட்டவேணுமானால் கயிற்றைக்கொண்டுதானே கட்டுகிறோம். கயிற்றுக்குப் பாசமென்பது ஒரு பெயராக வடமொழியில் வழங்கப்படும். பகவத்கீதையில் "ஆசாபாச சதைர் பத்தா:" என்று கூறியது இங்கு நினைக்கத்தக்கது. மனத்தைக் கட்டுவதற்குரிய கயிற்றைத் திருமழிசைப்பிரான் தெரிவிப்பது "எட்டினோடிரண்டு" என்பதாக. இதை மேலெழப்பார்ப்பவர்கள் எட்டு என்பது அஷ்டாக்ஷரம், இரண்டு என்பது த்வயமந்த்ரம் இவைகொண்டு மனத்தைக்கட்டவேணுமென்று சொல்லுவதாக நினைப்பர்கள். ஆசாரியர்கள் திருவுள்ளம் பற்றும் பொருளாவது எட்டோடிரண்டு சேர்ந்தால் பத்து. இவ்விடத்தில் பத்து என்கிற எண் விவக்ஷிதமல்ல. "பத்துடையடியவர்க்கெளியவன்" என்றபடி பக்திக்கும் பத்து என்று பேருண்டாதலால் அப்பொருளே இங்கு விவக்ஷிதம். இதை வடநூலார் "லக்ஷிதலக்ஷணை" என்பர்கள்.

## 49. எல்லீரும் வீடுபெற்றால் உலகில்லையென்றே

திருவாய்மொழியில் (4—10—6)ல் "போற்றி மற்றோர் தெய்வம் பேணப்புறத்திட்டு உம்மையின்னே தேற்றி வைத்தது எல்லீரும் வீடுபெற்றால் உலகில்லையென்றே" என்பன முன்னிரண்டடிகள். தேவதாந்தர பஜனம் பண்ணி அதோகதியை அடைந்தொழியவேண்டாமென்று உபதேசித்தருளின ஆழ்வாரை நோக்கி தேவதாந்தர பக்தர்களான சிலர் நாங்களும் நாராயண பஜனம் பண்ணி வாழ்ந்து போகலாமாயிருக்க எங்களையெம்பெருமான் அதோகதிக்கீடான வழியில் சேர்ப்பித்தது எதனாலென்று கேட்க, அதற்கு விடையளிப்பதிது. இங்கு "எல்லீரும் வீடுபெற்றாலுலகில்லையென்றே" என்பதுதான் மருமமாகவுள்ளது. மேலெழப்பார்க்குமளவில் இதற்கு என்ன பொருள்தோன்றுமென்றால் எல்லாரும் ஸ்ரீமந்நாராயணனையே தொழப்பெற்றால், எல்லாருமே வீடுபெற்று விட்டால், லீலா விபூதி அடியற்றுப்போய்விடும். அங்ஙனம் போகாமைக்காகவே எம்பெருமான் உங்களை இதர தேவதா பஜனம் பண்ணி ஸம்ஸாரிகளாய்த் தொலைந்து போம்படி செய்து வைத்தான்—என்பதாகப் பொருள் தோன்றும். இப்படிப்பட்ட பொருள் எம்பெருமானுக்கு மிக்க அவத்யத்தை விளைவிக்குமதாகையாலே ஆழ்வார் இப்பொருள்பட அருளிச்செய்ய ப்ரஸக்தியில்லை; ஆறாயிரப்படி முதலான வியாக்கியானங்களில் இப்பொருள் நெஞ்சாலும் நினைக்கப்படவில்லை. திருவாய்மொழிக்கு ஸம்ஸ்க்ருதப் பதவுரையிட்டு ஒன்பதினாயிரப்படி இயற்றிய தசோபநிஷத் பாஷ்யகாரரான ஸ்ரீரங்கராமாநுஜ ஸ்வாமி மட்டும் இப்பொருளையே பணித்து வைத்தார்.

பிள்ளான் முதலிய ஸகல பூருவாசாரியர்களும் திருவுள்ளம் பற்றின பொருள்: உலகில்லை யென்றே என்றவிடத்தில் உலகு என்பதற்கு சாஸ்த்ர மர்யாதை என்று பொருள். அவரவர்கள் பண்ணின புண்யபாபருப கர்மங்களுக்குத்தக்கபடியே பலன் கொடுப்பதென்று ஒரு சாஸ்த்ர மர்யாதை ஏற்பட்டிருக்கின்றது. நீங்கள் முற்பிறவிகளில் பிரபலமான தீவினைகளைச் செய்தபடியால் அவற்றின் பலனாக இப்பிறப்பில் உங்களை க்ஷுத்ர தேவதா பஜனம் பண்ணும்படியாக உபேக்ஷித்திடலாயிற்று; கொடிய பாவங்கள் செய்த உங்களை புண்யாத்மாக்களைப்போலே ஸ்ரீமந் நாராயண ஸமாச்ரயணமே செய்யும்படிபண்ணி விடுவதானால் அப்போது முன்சொன்ன சாஸ்த்ர மர்யாதை அழிந்துவிடுமன்றோ? அங்ஙனம் அழியாமைக்காகவே உங்களை இங்ஙனே நிறுத்திவைத்தது என்கை. வேதாந்த தேசிகனும் "தத்தத்கர்மாநுரூபம் பல விதரணத:" என்று இவ்வர்த்தத்தையே தாத்பர்ய ரத்நாவளியில் வெளியிட்டருளினார்.

## 50. எத்திறமுரலினோடிணைந்திருந்தேங்கியவெளிவே

பட்டர் நம்மாழ்வாருக்கு 'க்ருஷ்ண த்ருஷ்ணாதத்வம்" என்று திருநாமம் சாத்தினார். க்ருஷ்ணாவதாரத்தில் மிக்க ஈடுபாடு கொண்டவர் இவ்வாழ்வார். அதிலும் வெண்ணெயுண்டப்ரஸ்தாவத்தில் மிக மிக ஈடுபடுபவர். திருவிருத்தத்தில் "நெஞ்சால் நினைப்பரிதால் வெண்ணெயூணென்னும் ஈனச்சொல்லே"—என்று அழுது கொண்டே தலைக்கட்டினார். அச்சரிதையை மீண்டும் நினையாமலே இருக்கவேண்டுமிவர். திருவாய்மொழியில் முதற்பதிகத்தில் தத்வபரமாகச் சிலவிஷயங்களை அருளிச்செய்து இரண்டாம் பதிகத்தில் ஸம்ஸாரிகளுக்கு உபதேசம் செய்தருளி மூன்றும் பதிகத்தில் கண்ணபிரானுடைய ஸௌலப்ய குணத்தை [எளிமைக் குணத்தை] அனுபவிக்க விழிந்து கண்ணனுடைய நவநீத சௌர்யத்தை பேசப்புகுந்து "மத்துறு கடை வெண்ணெய் களவினில் உரவிடையாப் புண்டு எத்திறமுரலினோடிணைந்திருந்து ஏங்கிய வெளிவே" என்று சொல்லுகையில் இடையிலே எத்திறம்! என்று தளர்ந்தார். [மத்துறுகடை வெண்ணெய்]—அதாவது யசோதைப் பிராட்டி மத்தையுறுத்தித்தயிர் கடையும்போது அவளது நிழலிலே யொதுங்கியிருந்து களவு வழியிலே வெண்ணெயை அள்ளி அமுது செய்ய கையோடே பிடியுண்டு உரலோடே மார்வை நெருக்கிக்கட்டியிட்டு வைக்கப்பெற்று அழுது ஏங்கி நின்ற நிலைமை என்னே! என்று கரைகின்றாராழ்வார். இங்கு ஆறுமாதம் மோஹித்திருந்ததாக இதிஹாஸம். ஆசார்ய ஹ்ருதயத்தில் "மூவாறுமாஸம் மோஹித்து" என்றருளிச்செய்த மூவாறு மாஸங்களில் இது முதலாறு மாஸம். கூரத்தாழ்வான் அதிமாநுஷஸ்தவத்தில் "த்வாமந்யகோபக்ருஹ" என்னும் சுலோகத்தில் இந்த கட்டுண்ட கதையை அநுஸந்தித்து "தாத்ருங் நதே சரிதம் ஆர்யஜநா:ஸஹந்தே"—என்றார். இங்கு ஆர்யஜநா: என்றது நம்மாழ்வாரை. "நஸஹந்தே" என்றதனால் மோஹித்திருந்தபடியை ஸூசிப்பித்தபடி.

# அபூர்வார்த்த ரத்ந நிதி

(297 ஸஞ்சிகையின் தொடர்ச்சி)

## 51. என்னீர்மை கண்டிரங்கியிது தகாதென்னாத

*திருவாய்மொழியில் (1—4—4) தூதுவிடும் பதிகமான 'அஞ்சிறைய மடநாரையில்' இது நான்காம் பாசுரம். என்னுடைய தன்மையைக்கண்டு வைத்தும் இரங்காத பெருமானுக்கு நான் என்ன செய்தி சொல்லுவேன் என்று தளர்ந்து பேசுவதாக உள்ளது.*

முற்காலத்தில் ஒரு தமிழன் பட்டரிடத்தில் வந்து இப்பாட்டின் முதலடியில் ஒரு ஆக்ஷேபம் செய்தானும்; அதாவது—இது பிரிந்த நிலைமையில் சொல்லுகிற பாசுரமேயன்றிக் கூடியிருக்கும் நிலைமையில் சொல்லுகிற பாசுரமன்றே; பிரிந்திருக்கும் காலத்தில் தலைவியின் தன்மைகளைத் தலைமகன் பிறர் சொல்லக் கேட்கலாகுமே தவிரக் கண்ணால் நேரில் காணமுடியாதன்றோ! ஆகவே, "என்னீர்மை கேட்டிரங்கியிது தகாதென்னாத" என்று பாசுரமிருக்கவேண்டியது உசிதமாயிருக்க, "என்னீர்மை கண்டிரங்கி" என்று எப்படிச் சொல்லலாம்? என்று பூர்வபக்ஷம் செய்தானும். பட்டர் அதைக்கேட்டு 'பண்டிதரே! நன்கு கேட்டீர்; "புல்லிக் கிடந்தேன் புடைபெயர்ந்தேனவ்வளவில் அள்ளிக்கொள்வற்றே பசப்பு" என்ற திருக்குறளும், "ஊருண்கேணி யுண்டுறைத்தொக்க பாசியற்றேபசலை, காதலர் தொடுவுழித் தொடுவுழி நீங்கி விடுவுழி விடுவுழிப் பரத்தலானே" என்ற குறுந்தொகைச் செய்யுளும் உமக்குத் தெரியாது போலும்' என்று சொல்லி அவற்றைப் பரக்க உபந்யஸித்து ஸமாதானப்படுத்தியருளினராம். (ஸமாதான விவரணம் வருமாறு:—)

புல்லிக்கிடந்தேன் என்ற குறள் திருக்குறளில் பசப்புறு பருவரல் எனுமதிகாரத்தில் ஏழாவதாகும். முன்பொருநாள் காதலரை அழுந்தத் தழுவிக்கிடந்தேன்; கை மாறுவதற்காகச் சிறிது புடைபெயர்ந்தேன்; ஒரு நொடிப்பொழுது விலகின மாத்திரத்திலும் பசலைநிறம் வந்து உடம்பெல்லாம் மூடிக்கொண்டது என்பது இதன் கருத்து. "ஊருண்கேணி" என்ற செய்யுள் குறுந்தொகையில் முன்னூற்றுத் தொண்ணூற்றிரண்டாவது. இதன் கருத்தாவது—ஊரிலுள்ள ஜனங்களாலே நீருண்ணப்பெறுகிற கேணியினுள்ளே படர்ந்து கிடக்கின்ற பாசியைப் போன்றது பசலைநிறம்; தண்ணீரில் நாம் கை வைத்தோமாகில் பாசி நீங்கும். கையை எடுத்து விட்டோமாகில் அவ்விடமெல்லாம் பாசி மூடிக்கொள்ளும்; அதுபோல, கணவனுடைய கை படுமிடங்களில் பசலைநிறம் நீங்கும்; அணைத்த கை நெகிழ்த்தவாறே அப்பசலைநிறம் படரும்; ஆதலால் பாசிபோன்றது பசலை என்றபடி. (தொடுவுழித் தொடுவுழி—தொட்டவிடங்கள்தோறும். விடுவுழிவிடுவுழி—விட்ட இடங்கள்தோறும். பரத்தலான்—வியாபிக்கிறபடியினால்) பிரிவாற்றாமையினால் ஸ்த்ரீகளின்

மேனியில் தோன்றும் நிறவேறுபாடு பசலைநிறமெனப்படும். நாயகனைவிட்டுப் பிரிந்த காலத்திலே நாயகியினுடலில் இந்த நிற வேறுபாடு தோன்றுவது ஆச்சரிய மன்று; ஒரு படுக்கையிலேயே படுத்துக் கூடியிருக்கும்போதே க்ஷணகாலம் கை நெகிழ்த்தவளவில் இந்தப் பசலைநிறம் படர்கின்றதென்றால் பிரிந்தநிலைமையில் கேட்கவேண்டியதில்லையன்றோ.

பட்டரிடத்தில் ஆக்ஷேபம் செய்த தமிழனுக்கு இப்பொழுது என்ன ஸமா தானமாயிற்றென்னில், இப்பாட்டு பிரிவுகாலத்தில் சொல்லுவதானாலும் கூடியிருந்த காலத்தில் நிகழ்ந்த ஸம்பவத்தையே நினைப்பூட்டுவதால் கேட்டிரங்கி என்ன வேண்டியதில்லை; கண்டிரங்கி என்றே சொல்லத்தகும் என்பதாம்.

## 52. எங்கானுமீதொப்பதோர் மாயமுண்டே!

ஆழ்வார்களின் அனுபவப்ரகாரங்கள் பல்வகைப்பட்டவை யென்பது ப்ரஸித்தமே. சிலவிடங்களில் அவனுடைய பரத்துவத்தைப் பரக்க அனுபவிப்பார்கள். சிலவிடங்களில் அவனுடைய ஸௌலப்யத்தை விசேஷமாக அநுபவிப்பார்கள். இங்ஙனன்றிக்கே ஒரே இடத்தில் பரத்வத்தையும் ஸௌலப்யத்தையும் சேர்ப்பது ஒரு விலக்ஷணமான அநுபவம். பரத்வத்தை முன்னே சொல்லி உடனே ஸௌலப்யத்தைச் சொல்லுவது, ஸௌலப்யத்தை முன்னே சொல்லி உடனே பரத்துவத்தைப் பேசுவது என்றிருவகையுண்டு. பரத்வத்தைப் பேசினவாறே அதுகேட்டு அஞ்சி இருய்க்க நினைப்பவர்களுக்கு ஸௌலப்யத்தைச் சொல்லித் தெளிவித்தல். ஸௌலப்யத்தைக் கேட்டவாறே ஸாமாந்யமாக நினைப்பவர்களுக்கு பரத்வத்தைப் பேசி பக்தியை ஊட்டுதல்; இப்படியான அநுபவங்களில் திருமங்கையாழ்வார் தமது பெரிய திருமொழியில் "எங்கானுமீதொப்பதோர் மாயமுண்டே" (10—6) என்கிற பதிகத்தில் பரத்துவத்தை முந்துறப்பேசி ஸௌலப்யத்தைப்பின்னே பேசுகிறார். மேலே பதினோராம்பத்தில் "மானமருமென்னோக்கி" எனும் ஐந்தாம்பதிகத்தில் பாட்டுத்தோறும் முன்னடிகளால் ஸௌலப்யத்தையும் பின்னடிகளால் பரத்வத்தையும் பேசியனுபவிக்கிறார். அவ்வனுபவத்தின் விவரணம் மேலே ப்ராப்தமாகும். இப்போது "எங்கானுமீதொப்பதோர்" எனும் பதிகத்தின் அநுபவம் கேளீர்! இப்பதிகத்தில் பாட்டுத்தோறும் மூன்றடிகளால் எம்பெருமானுடைய பரத்வத்தைப் பரக்கப்பேசி ஈற்றடியை "அவன் காண்மினின்றாய்ச்சியரால் அளைவெண்ணெயுண்டாப் புண்டிருந்தவனே." என்று இம்மகுடம் வைத்தே தலைக்கட்டுகிறார். இங்குச் செய்யவேண்டிய ரஸாநுபவத்தை நம்முடைய திவ்யார்த்த தீபிகை கொண்டு செய்க.

## 53. எங்கே காண்கேனீன் துழாயம்மான் தன்னை

திருவாய்மொழியில் (8—5—11) "எங்கே காண்கேனீன் துழாயம்மான் தன்னை யானென்றென்று அங்கே தாழ்ந்த சொற்களால் அந்தண்குருகூர்ச் சடகோபன்" என்றுள்ளது. ஆசார்ய ஹ்ருதயத்தில் ரிஷிகளிற் காட்டிலும்

ஆழ்வார்க்குண்டான பெருமையை பலவாறு விளக்கிக்கூறுமிடத்து இப்பாசுரத்தையெடுத்துக்கொண்டு "எங்கே காண்கேனென்னுமிவரலமாப்பு அவர்களுக்குப் புத்ர வியோகத்திலே" என்றருளிச் செய்திருப்பது அற்புதமான ஸ்ரீஸூக்தி. (அதாவது) எம்பெருமானைப் பிரிந்த வருத்தத்தினால் கண்ணுங்கண்ணீருமாய்க் கடலோடு மலையோடு ஆகாசத்தோடு வாசியற எங்கும்தேடி நெஞ்சு கலங்கி "திருமாலே!" என்று கூப்பிட்டு 'எங்கே காணக்கடவேன்! என்று இவ்விதமாக எம்பெருமான் விஷயத்தில் ஆழ்வார்படும் ஆற்றாமையெல்லாம் ரிஷிகளுக்குப் புத்ர விரஹத்திலேயாயிருக்கும். வஸிஷ்டபகவான் புத்திரனிறந்த வருத்தத்தினால் மரணத்தை விரும்பி மலையிலேறி விழுவது, நெருப்பிலே குதிப்பது, கழுத்தில் கல்லைக் கட்டிக்கொண்டு கடலிலே விழுவது ஆக விப்படியெல்லாம் தடுமாறினாரென்பதும், வேதவ்யாஸ பகவான் புத்திர வியோகம் பொறுக்க மாட்டாமல் 'புத்திரனே!' என்று வாய்விட்டுக் கூப்பிட்டு அழுதுகொண்டு காணப்பெறாமையால் அலமந்து திரிந்தாரென்பதும் அவர்களேயெழுதி வைத்த புராணங்களில் ப்ரஸித்தம்.

## 54. எற்றுக்கு நீயென் மருங்கில் வந்தாய் எம்பெருமான் நீ எழுந்தருளே

எம்பெருமானோடு ப்ரணயகலஹம் கொண்டாடிப் பேசின ஆழ்வார்கள் மூவர்—நம்மாழ்வாரும் குலசேகராழ்வாரும் திருமங்கையாழ்வாரும். திருவாய்மொழியில் (6-2) மின்னிடைமடவார் பதிகம் நம்மாழ்வாருடைய ஊடல். பெரிய திருமொழியில் (10–8) காதில் கடிப்புப் பதிகம் திருமங்கையாழ்வாருடைய ஊடல். பெருமாள் திருமொழியில் (6) ஏர்மலர்ப்பூங்குழல் என்கிற பதிகம் குலசேகராழ்வாருடைய ஊடல். அதில் ஆறுவது பாசுரம் மற்பொருதோளுடை வாசுதேவா வென்பது.

> "மற்பொருதோளுடை வாசுதேவா வல்வினையேன் துயில் கொண்டவாறே
> இற்றையிரவிடை ஏமத்தென்னை இன்னணே மேலிட்டகன்றுநீபோய்
> அற்றையிரவுமோர் பிற்றைநாளும் அரிவையரோடு மணந்துவந்தாய்
> எற்றுக்குநீயென் மருங்கில்வந்தாய் எம்பெருமான் நீயெழுந்தருளே."

இப்பாசுரத்தின் சுவையைச் சிறிது அருந்துவோம். திருவாய்ப்பாடியில் கண்ணபிரானால் வஞ்சிக்கப்பட்ட ஆய்ச்சிகள் பலருளர். அவர்களுள் ஒருத்தியினுடைய பாசுரமிது. தன்னருகே வந்த கண்ணனை நோக்கி "மற்பொருதோளுடை வாசுதேவா!" என விளிக்கின்றவிது மிக்க சுவையுடைத்து. மல்லர்களோடு போர் செய்யக் கற்றாயேயன்றி என்னோடு ச்ருங்கார ரஸாநுபவம் பண்ணக் கற்றிலை காண் என்ற உபாலம்பம் தோன்றநின்றது இது. அன்றொருநாளிரவில் நீ என்னோடு ரமிப்பதாக வந்து நான் படுக்கையில் சாய்ந்தவாறே என்னை உறங்கவிட்டு நடுச்சாமத்திலே மெதுவாய் நெகிழ்ந்துபோய் அன்றிரவும் மறுநாளிரவும் மற்றுள்ள பெண்களெல்லாரோடும் ஸம்ச்லேஷித்து இன்று இங்கு வந்தாய் என்று இவள் சொன்னவாறே "இப்போது இவளைக் கட்டியணைத்தால்

இவளது சீற்றம் ஆறிவிடும்'' என்று நினைத்துக் கண்ணபிரான் நெருங்கி வர, நீ யார் யாரைத் தீண்டிவந்தாயென்றது தெரியாது, என்னைத் தீண்டாதே, கடக்க நில் என்கிருள். [எம்பெருமான்! நீ எழுந்தருளே] பூர்வவாஸனையாலே 'வந்தாய்' என்று வாய்தவறிச் சொல்லிவிட்டேன்; அத்தை க்ஷமித்தருள வேணும்; தேவரீர்கள் பெரிய முதலிகள்; அப்பால் எழுந்தருள வேணும் என்கிருள். [வல்வினையேன்] நீ என்னை ஒருத்தியையே விரும்பி மற்றையோரைக் கண்ணெடுத்துப் பாராமலிருப்பதற்குறுப்பான பாக்யமற்ற நான் என்பது கருத்து. இரண்டாமடியில் 'இற்றையிரவிடை' என்றே உலகெங்கும் பாடம் நிகழினும்' அற்றையிரவிடை என்றபாடமே வியாக்யானத்திற்கும் பொருட் சேர்த்திக்கும் தகும் என்பர் பெரியோர். மோனையின்பத்தின் மிகுதியைக் கருதி இற்றையென மாற்றினர் போலும் பின்புள்ளார். அற்றை என்ற பாடத்திலும் மோனைக்குக் குறையில்லை யென்க. 'அகன்று' என்ற சீரை நோக்குக. இப்பாட்டின் முடிவில் 'எம்பெருமான் நீ எழுந்தருளே' என்பது மட்டும் நோக்குங்கால் எம்பெருமானைத் தன்னிடம் எழுந்தருள ஆவலோடு அழைப்பதாகப் பொருள் தோன்றும். இங்கு நில்லாமல் அப்பால் போ என்னும் பொருளில் எம்பெருமான் நீ எழுந்தருளே என்றது உபசார வார்த்தை. திருவாய்மொழியில் ''வானமாமலையே அடியேன் தொழவந்தருளே'' என்று கூவின ஆழ்வார் தாமே மேலே ஊடல்பதிகமான மின்னிடைமடவாரில் 'போகு நம்பீ, போகு நம்பீ' என்று ஊடித்தள்ளினதை இங்கு நினைப்பது. இத்தகைய அனுபவங்கள் ரிஷிகளில் ஒருவர்க்கும் நேர்ந்ததில்லை.

## 55. என்னை வருகவெனக் குறித்திட்டு

இப்பாசுரம் குலசேகராழ்வாருடைய ஊடல் பதிகத்தில் எட்டாவதாகும். இதில் ஈற்றடி 'இன்னமென்கையகத் தீங்கொருநாள் வருதியேல் என் சினம் தீர்வன் நானே' என்பது. இவ்விடத்து வியாக்கியானத்தில் சுவைமிக்கதோர் ஐதிஹ்யமுள்ளது. (அதாவது) 'என்சினம் தீர்வன் நானே' என்கிறவிடத்தைக் கோயிலில் திருவத்யயனோத்ஸவத்தில் 'உய்ந்தபிள்ளை' என்பாரொரு அரையர் அபிநயிக்கும்போது கையாலடிப்பதும் காலாலே துவைப்பதுமாய் அபிநயித்தார்; அதாவது—மறுபடியும் நீ என்கையில் அகப்படும்போது உன்னை நான் கையாலடித்தும் காலால் துகைத்தும் என் கோபத்தைத் தணித்துக் கொள்வேன் என்பதாகக் கருத்துப்பட அபிநயித்தார். அப்போது கோஷ்டியிலெழுந்தருளியிருந்த எம்பார் இங்ஙனே அரையர் காட்டிய அபிநயத்தைக் கடாக்ஷித்து அவர்க்கு ரஸிக்யம் போராதென்று திருவுள்ளம்பற்றி, கெடுவாய்! அப்படி அவள் செய்தாளாகில் ''மம சிரஸி மண்டனம் கோபிகாதாடநம்' என்றிருக்கின்ற கண்ணனுக்கு அது வருத்தமோ? வேப்பிலை யுருண்டையோ? இது அவனுக்கு அலப்யலாபமாகுமன்றோ? ஆகையால் அதுவன்று கருத்து; முகங்கொடுக்காமல் முகத்தை மாற வைத்து என் கோபத்தைத் தணித்துக் கொள்வேன் என்னும் கருத்துத் தோன்ற, கையிட்டு முகத்தை மறைத்துத் திரியவைத்தருளிக் காட்டவேணுமென்று தாம் அவ்வாருக அபிநயித்துக் காட்டினார் என்பது.

## 56. எருத்துக்கொடியுடையானும் பிரமனுமிந்திரனும்

பெரியாழ்வார் திருமொழியில் (5—3—6) "எருத்துக்கொடியுடையானும் பிரமனுமிந்திரனும், மற்றுமொருத்தரும் இப்பிறவியென்னும் நோய்க்கு மருந்தறிவாருமில்லை," என்றருளிச்செய்த பாசுரம் இங்கு விவரிக்கப்படுகிறது. இது திருமாலிருஞ்சோலைப் பதிகத்திலுள்ள பாசுரம். இத்தலத்தெம்பெருமானை, "மருத்துவனாய் நின்ற மாமணிவண்ணா!" என்று விளித்து ஸகல வேதாந்த ஸாரார்த்தத்தை யருளிச் செய்கிறார். சாஸ்த்ரஜ்ஞர் சில விஷயங்களை விவரிக்கும்போது அன்வய முகத்தாலும் வ்யதிரேக முகத்தாலும் உரைப்பார்கள். எம்பெருமானே மோக்ஷப்ரதன் என்றால் அது அன்வயமுகேன உரைத்ததாகும். எம்பெருமானைத் தவிர வேறொருவரும் மோக்ஷப்ரதரல்லர் என்பது வ்யதிரேகமுகேன உரைப்பதாகும். சிலவிடங்களில் இவ்விரண்டு விதங்களாலும் சாஸ்த்ரார்த்தங்களைக் கூறுவதுண்டு. சிலவிடங்களில் இரண்டத்தொன்றால் கூறுவதுண்டு. அந்வயமுகேந கூறுவதிற் காட்டிலும் வ்யதிரேகமுகேந கூறுவதில் விசேஷமுண்டென்பர். இவரே வித்வான் என்பதிற்காட்டிலும், இவரைத்தவிரவேறு வித்வானில்லையென்று கூறுவது விசேஷமல்லவா? வடமொழியில் அந்வய வ்யதிரேகங்கள் என்னப்படுமவற்றைத் தமிழர் உடன்பாடு, எதிர்மறை என்பர். இப்பாசுரத்தில் எருத்துக்கொடியுடையானாகிய சிவபிரான் முதலானோர் ஒருத்தரும் இப்பிறவியென்னும் நோய்க்கு மருந்தறிவாரில்லை என்று கூறியதனால் இது வ்யதிரேகமுகேந கூறியதாகும். பிறவியென்னும் நோய்க்கு மருந்தறிகையாவது முக்தி பெறுவிக்கு வல்லமையாகும். மருந்தறிவாரில்லை என்றதனால் இதர தெய்வங்களிடத்தில் மோக்ஷப்ரதாநசக்தி லவலேசமுமில்லை என்றபடியாயிற்று. ஸஹஸ்ர நாமத்தில் "நிர்வாணம் பேஷஜம் பிஷக்" என்றோதப்பட்டிருப்பது ப்ரஸித்தம். மருந்தும் அவன்தான், மருத்துவனும் அவன்தான் என்றவிது மிகவும் ரஸிக்கத்தக்கது. "மருந்தும் பொருளும் அமுதமும் தானே" என்றார் பேயாழ்வார்.

நம்மாழ்வார் திருவாய்மொழியில் (7-1-5) "ஆர்மருந்தினியாகுவார்" என்று அற்புதமாக அருளிச் செய்கிறார். உலகில் "மருத்துவன் யாவன்? மருந்து எது?" என்று கேட்பதுண்டேயொழிய "யார் மருந்து?" என்று கேட்பாரில்லை. "ஆர் மருந்தினியாகுவார்?" என்றருளிச் செய்த ஆழ்வார் திருவுள்ளத்தில் ஒரு பரம சேதன வ்யக்தியே மருந்தாகக் கூடுமென்று நிச்சயித்துக் காட்டினபடி. ஸித்தௌஷதங்கள் மலையிலிருந்து கண்டுபிடிக்கப்படும். ப்ரக்ருதம் பெரியாழ்வார் கண்டுபிடித்த ஸித்தௌஷதம் திருமாலிருஞ்சோலை மலையிலுள்ளதாயிற்று. இக்காலத்திலும் ஔஷதஸேவை பண்ணுமவர்கள் "ஔஷதம் ஜாஹ்நவீ தோயம் வைத்யோ நாராயணோ ஹரி:" என்றநுஸந்திப்பது பெரும்பாலும் வழக்கத்திலுள்ளது.

## 57. எப்பொழுதும் நாள் திங்கள்

திருவாய்மொழியில் (2—5—4) எப்பொருளும் தானாய் என்கிற பாட்டின் மூன்றாமடியான இதற்கு அடுத்த அடி "அப்பொழுதைக் கப்பொழுதென்னாரா

வமுதமே'' என்பது. அதைப்பற்றிய விவரணத்தை கீழே (10) லக்க மிட்ட மகுடத்தின் கீழ் காண்பது.

## 58. எல்லையில் ஞானத்தன்

திருவாய்மொழியில் (3—10—8) எட்டாவதுபாட்டின் பின்னடியான ''எல்லையில் ஞானத்தன் ஞானம: தே கொண்டு எல்லாக் கருமங்களும் செய் எல்லையில் மாயனைக் கண்ணனை தாள்பற்றி'' என்றவிதில் ஒரு விசேஷம் குறிக் கொள்ளத்தக்கது. பகவத்கீதை நான்காமத்யாயத்தில் (அதாவது அவதாராத்யாயத்தில்) ''அஜோபி ஸந் அவ்யயாத்மா பூதாநாம் ஈச்வரோபி ஸந், ப்ரக்ருதிம் ஸ்வாம் அதிஷ்டாய ஸம்பவாமி ஆத்மமாயயா'' என்றவிடத்து மாயா சப்தத்திற்கு ஆதிசங்கராசார்யர் கொண்ட அர்த்தத்தை கீதாபாஷ்யத்தில் நிரஸித்தருளுகிற ஸ்வாமி எம்பெருமானுர் ''மாயா வயுநம் ஜ்ஞாநம்'' என்கிற வைதிக நிகண்டுவைக் காட்டி மாயா சப்தத்திற்கு இந்த்ரஜாலம் அர்த்தமன்று. ஞாநம்—அதாவது ஸங்கல்பரூபஜ்ஞாநம்—என்று பொருள் அருளிச்செய்தது ப்ரஸித்தம். மேலே காட்டிய திருவாய்மொழிப் பாசுரம் அதற்கு நிதாநமாயிருக்கும். ''எல்லையில் ஞானத்தன்'' என்றது விவரணம். ஈற்றடியில் ''எல்லையில் மாயனைக் கண்ணனை'' என்பது கீதையில் கண்ணன் சொன்ன ''ஆத்மமாயயா'' என்பதை நினைவூட்டினபடி. மூலப்ரக்ருதிக்கு ''மாயா'' என்று பெயர் வழங்குவதன் காரணத்தை தத்வத்ரயத்தில் அசித் ப்ரகரணத்தில் பிள்ளை லோகாசார்யர் விவரித்துள்ளார். அது அங்கே காணத் தக்கது.

## 59. எம்பெருமானுர் தரிசனம்... ...நம்பெருமாள் பேரிட்டு நாட்டிவைத்தார்

நம்முடைய விசிஷ்டாத்வைத ஸித்தாந்தமானது நெடுநாளாக பகவத்ராமாநுஜ தர்சனமென்றும் எம்பெருமானுர் தரிசனமென்றும் வழங்கப்பட்டு வருகிறது இதைக் கண்ட பிறர் இது ராமாநுஜரால் புதிதாக ஆக்கப்பட்டதொரு தரிசனமென்று பழிக்கத் தொடங்கினுர்கள். அன்னவர்களைத் தெளிவிக்க வேண்டி உபதேசரத்தினமாலையில், ''எம்பெருமானுர் தரிசனமென்றே யிதற்கு நம்பெருமாள் பேரிட்டு நாட்டி வைத்தார் அம்புவியோர் இந்தத் தரிசனத்தை எம்பெருமானுர் வளர்த்த அந்தச் செயலறிகைக்கா'' என்கிற பாசுரத்தை மணவாள மாமுனிகள் அருளிச்செய்தார். எம்பெருமானுர் தரிசனமென்கிற வ்யபதேசமானது எம்பெருமானுரால் ஆக்கப்பட்டதென்கிற பொருளைக் கொண்டதன்று. அவர் தம்மால் வளர்க்கப்பட்டது என்னுங் கருத்தைக் கொண்டது. ஏற்கெனவே ஸ்வாமி ராமாநுஜர்க்குத் திருக்கோட்டியூர் நம்பியால் 'எம்பெருமானுர்' என்று விருதளிக்கப்பட்டிருந்தது. நம்பெருமாள் அந்த விருதையும் ஆமோதித்து எம்பெருமானுர் தரிசனமென்று இந்த ஸித்தாந்தத்தை வழங்கவேண்டுமென்று நியமித்தார். தத்வமுக்தா கலாபத்தில் நாதோபஜ்ஞம் ப்ரவ்ருத்தம் பஹுபிருபசிதம் யாமுநேயப்ரபந்தை: த்ராதம் ஸம்யக் யதீந்த்ரை: இதம் அகிலதம:கர்சநம் தர்சநம்

ந:'' என்று வேதாந்த வாசிரியரால் பணிக்கப்பட்டது. இதில் ''யதீந்த்ரை: ஸம்யக்த்ராதம்'' என்றது முக்கியமாக நோக்கத்தக்கது. இங்கு ப்ராஸங்கிகமாக மற்றொன்றும் தெரிவிக்கிறோம். அவ்வாசிரியர் தாமே பணித்த யதிராஜ ஸப்ததியில் ''ப்ருத்யதிக்ஷ்மா த்ருஷ்டம் மதமிஹ நவீநம், ததபி கிம்? ..............'' இத்யாதி ச்லோகமும் இங்கு நினைக்கவுரியது. இதில் ஸ்ரீராமாநுஜதர்சநம் நவீநம் என்று க்ஷேபித்தவர்களை நோக்கி இரண்டு வகையான ஸமாதாநம் தெரிவிக்கப்படுகிறது. அப்யுபகம்ய ஸமாதாநம் என்பது முதலது. தத்வார்த்த ப்ரதர்சன ஸமாதாநம் என்பது இரண்டாவது. எதிரிகள் சொல்லுவதை ஏற்றுக்கொண்டே மறுப்புரைப்பது அப்யுபகம்ய ஸமாதாநம் எனப்படும். ப்ரக்ருதத்தில் பகவத் ராமாநுஜதர்சநம் நவீநம் என்றீர்களே. அதை அப்படியே இசைந்து கொண்டு ''நவீநமாகவே யிருக்கட்டும், அதனால் என்ன குடிகெட்டுப் போயிற்று? காளிதாஸ மஹாகவி தமது ஒரு நாடகத்தில் ''புராணமித்யேவ ந ஸாது ஸர்வம் ந சாபி காவ்யம் நவமித்யவத்யம், ஸந்த: பரீக்ஷ்ய அந்யதரத் பஜந்தே மூட: பரப்ரத்யயநேயபுத்தி:'' என்றார். இதன் கருத்தாவது, நவீனம் என்று கொண்டே ஒன்று பழிக்கத்தக்கதன்று. புராதனமென்று கொண்டே ஒன்று ஆதரிக்கத்தக்கதன்று. புத்திமான்கள் குணதோஷங்களை விமர்சித்து குணவத்தரமாயிருந்தால் நவீனமானதையும் ஏற்றுக் கொள்வர்கள். புராதனமாயிருந்தாலும் குணஹீனமானதை விட்டொழிப்பர்கள் என்பதாம். இதே ரீதியில் எம்பெருமானார் தரிசனத்தை குணங்கொண்டு விமர்சிக்க வேணுமேயொழிய நவீனமென்று சொல்லி மட்டும் பழிக்கலாகாது. உங்களுடைய தரிசனம் புராதனமாயிருந்தாலும் குணஹீனமாகையால் பழிக்கத் தக்கதே'' என்பதான இது பூர்வார்த்தத்தின் கருத்து. ''தாதஸ்ய கூபோயமிதி ப்ருவாணா: கிம் க்ஷாரதோயம் ரஸிகா: பிபந்தி'' என்றார் பிறரும். இது அப்யுபகம்ய ஸமாதானமாகும். இனி உத்தரார்த்தத்தினால் வாஸ்தவார்த்தம் தெரிவிக்கப்படுகிறது. ''நிசாம்யந்தாம் யத்வா நிஜமதிதிரஸ்காரவிகமாத் நிராதங்கா: டங்கத்ரமிடகுஹதேவ ப்ரப்ருதய:'' என்பதாம். ஸ்ரீ பாஷ்யோபக்ரமத்தில் ''பூர்வாசார்யாஸ் ஸஞ்சிக்ஷிபு:'' என்றவிடத்து ச்ருதப்ரகாசிகையில் ''டங்கத்ரமிடகுஹதேவாத்யா: பூர்வாசார்யா:'' என்று ஸாதித்திருப்பதையும் இங்கு கூட்டிக்கொள்வது. மிகப் புராதனர்களான டங்கத்ரமிடகுஹதேவாதிகள் ஆதரித்த தரிசனம் விசிஷ்டாத்வைத தரிசனமாகையாலே இது நவீனமன்று காணீர் என்று நிகமித்தபடி.

## 60. எப்பேர் மற்றப்பேர்

பொய்கையாழ்வார் தமது திருவந்தாதியில் ''தமருகந்ததெவ்வுருவமவ்வுருவந்தானே தமருகந்ததெப்பேர் மற்றப்பேர் தமருகந்தெவ்வண்ணம் சிந்தித்திமையாதிருப்பரே அவ்வண்ணமாழியானும்'' என்றருளிச்செய்தது அர்ச்சாவதார ஸௌலப்யத்தைக் காட்டின பாசுரமாம். இப்பாட்டின் பெரியவாச்சான்பிள்ளை வ்யாக்யானத்தில் சில ஐதிஹ்யங்கள் அருளிச்செய்யப்பட்டுள்ளன. அவற்றுள் ''தமருகந்ததெப்பேர் மற்றப்பேர்'' என்றவிடத்திற்கான ஐதிஹ்யம் இவ்

விடத்தே ரஸிக்கத்தக்கது. நஞ்சீயர் பட்டர் திருவடிகளிலே ஆச்ரயித்த பின்பு தமது திருவாராதனப் பெருமாளுக்கு "ஆயர்தேவு" என்று திருநாமம் சாற்றிஞர். திருவாய்மொழியில் பத்தாம் பத்தில் மூன்றும் பதிகத்தின் பத்தாம் பாசுரம் "செங்கனி வாயெங்களாயர்தேவே" என்று தலைக்கட்டுகிறது. அதில் ஆயர்தேவு என்ற திருநாமத்தில் நஞ்சீயர்க்கு ஈடுபாடு உண்டாகித் தமது பெருமாளுக்கு அந்தத் திருநாமத்தைச் சாற்றினர். அந்தத் திருநாமத்தைப் பற்றின ஐதிஹ்யம் பெரிய வாச்சான்பிள்ளை யருளிச் செய்வது கேளீர். (வ்யாக்யான ஸ்ரீஸூக்தி) "எங்களாழ்வான்பாடே ஆயர்தேவு சென்று நாவற்பழம் வேண்ட, 'நீ யார்?' என்று அவர் கேட்க, 'ஜீயர் மகனான ஆயர்தேவு' என்ன, ஜீயரைக் கண்டு 'உம்முடைய பிள்ளை எங்களைக் குடியிருக்கவொட்டுகிறிலன்' என்றார்." (விவரணம்) நஞ்சீயருடைய திருவாராதனப்பெருமாள் எங்களாழ்வான்பாடே சென்று எனக்கு நாவற்பழம் தாருமென்று கேட்க அவர் நீ யார் என்று கேட்க நான் கண்ணன், கோபால க்ருஷ்ணன் என்று சொல்லாதே தனக்கு நஞ்சீயர் இட்டிருந்த திருநாமத்தை உகந்து "நான் ஆயர்தேவு" என்று சொல்லிக்கொண்டான் என்கிற விஷயம் இங்குச் சுவைக்கத் தக்கது.

## 61 எச்சில்வாய் சுத்தி பண்ணுமல்

இது ஆசார்யஹ்ருதய ஸ்ரீ ஸூக்தி. ஆர்ஷக்ரந்தங்களிற் காட்டில் ஆழ்வார் அருளிச்செயலுக்குண்டான விசேஷத்தை யருளிச்செய்யுமிடத்தில், "ராமாயண நாராயண கதையென்று தொடங்கி கங்கா காங்கேய ஸம்பவாதி அஸத் கீர்த்தனம் பண்ணின எச்சில் வாய் சுத்திபண்ணுமல், திருமாலவன் கவியென்ற வாயோலைப் படியே மாற்றங்களாய்ந்துகொண்டு உரியசொல் வாய்த்தவிது........அருளிச் செயலில் ஸாரம்." என்ற சூர்ணையின் வியாக்கியானம் ஸேவிக்கத்தக்கது. ஸ்ரீ ராமாயணத்தில் கங்கோத்பத்தி வர்ணனம் புஷ்பகவிமானவர்ணனம் முதலிய பல கதைகளின் சேர்க்கையினால் பூர்த்தியாக ராமகதையே என்பதற்கில்லை. மஹாபாரதம் பூசல் பட்டோலை யென்று ப்ரஸித்தி பெற்றுவிட்டது. தவிர, காங்கேயரான பீஷ்மர் போன்ற பலருடைய உற்பத்தியும் இதில் சொல்லப்பட்டது. வியாஸர் தாமே பாரதத்தை யெழுதி முடித்த பிறகு அதை முழுதும் வாசித்து மனம் நொந்து "அஸத்கீர்த்தன காந்தார பரிவர்த்தன பாம்ஸுலாம், வாசம் சௌரிகதாலாப கங்கயைவ புநீமஹே." என்று சுலோகமிட்டு, அக்குறைதீர ஹரிவம்சமியற்றினார் என்று ப்ரஸித்தம். வால்மீகி இங்ஙனே சுலோகமியற்றுவிட்டாலும் இது அவர்க்குமொக்கு மென்று மணவாள மாமுனிகள் திருவுள்ளம் பற்றுகிறார். இப்படி எச்சில் வாய் சுத்திபண்ண வேண்டிய ப்ரஸக்தியில்லை யாழ்வார்களுக்கு. ஆழ்வார் திருவிருத்தத்தில், "திருமாலவன் கவி யாது சொன்னேன்" என்று ப்ரதிஜ்ஞை பண்ணினபடியே இடையிடையே, "மாற்றங்களாய்ந்து கொண்டு மதுசூதபிரானடிமேல்" என்றும், "உரியசொல்லாலிசை மாலைகளேத்தி" என்றும், "ஏற்கும் பெரும்புகழாயிரம்" என்றும் ஸாதிக்கும்படி பகவத் விஷயமாகவே தலைக்கட்டியிருப்பது அனுபவரஸிகர்களுக்குத்தெரியும்.

# அபூர்வார்த்த ரத்னநிதி

(முன் தொடர்ச்சி)

## 62. எத்தேவர் வாலாட்டும் எவ்வாறு செய்கையும்

திருமழிசைப்பிரான் அருளிச்செய்த நான்முகன் திருவந்தாதியில் முப்பத்தெட்டாம் பாசுரமான *அகைப்பில் மனிசரை என்ற பாசுரத்தின் பின்னடிகள் "எத்தேவர் வாலாட்டும் எவ்வாறு செய்கையும் அப்போ தொழியுமழைப்பு" என்பவாம். இப்பின்னடிகளே முக்கியமானவை. திருவாய்மொழியில் (1-1-5) "அவரவர் தமதமதறிவறிவகைவகை அவரவரிறையவர் எனவடியடைவர்கள் அவரவரிறையவர் குறைவிலரிறையவர் அவரவர் விதிவழி அடைய நின்றனரே" என்ற பாசுரத்தின் பொருளைத் தெரிந்துகொண்டபின் இப்பாட்டின் பொருள் நன்கு நெஞ்சில் பதியும். அப்பாசுரத்தின் கருத்தாவது—பலவகைப் பயன்களை விரும்புகின்ற உலகத்தவர்கள் தங்கள் தங்கள் ருசிக்குத் தக்கபடி பிரமன், சிவன், இந்திரன் என்றுள்ள பலபல தெய்வங்களை ஆச்ரயிக்கின்றனர்; அத்தெய்வங்கள் இவர்கள் விரும்பிய பலன்களைக் கொடுக்கக் குறையில்லை; ஏனென்றால் ஸர்வேச்வரனான ஸ்ரீமன் நாராயணன் அத்தெய்வங்களுக்கு அந்தர்யாமியாயிருப்பதனால் அந்த மாஹாத்மியத்தினால் அத்தெய்வங்கள் பலன் கொடுக்கும் சக்தியுடையனவாக ஆய்விடுகின்றன என்க. ஆகவே எம்பெருமானுடைய ஆவேசத்தினால்தான் ஸாமாந்ய தெய்வங்களெல்லாம் தங்களைப்பற்றின அபேக்ஷகர்களுக்கு அந்தந்த ப்ரயோஜனங்களை அளிக்கின்றனவென்றதாயிற்று.

இப்பாட்டின் கருத்தே திருமழிசைப்பிரான் பாசுரத்தில் விளங்குகிறது. (உகைக்குமேல்) உகைத்தலாவது உபேக்ஷித்தல்; தேவதாந்தரங்களிடத்தில் தான் ஆவேசியாத பக்ஷத்தில் என்றபடி. எத்தேவர் வாலாட்டும்—பிரமன் உலகங்களைப் படைத்தானென்றும், சிவன் திரிபுரமெரித்தானென்றும், இந்திரன் வ்ருத்ராஸுர வதம் பண்ணினானென்றும் இப்படிப் பல தெய்வங்களைக் குறித்துப் பேசுவதெல்லாம் தெரியுமே; எம்பெருமான் அநுப்ரவேசித்திராவிடில் ஒரு தெய்வமாவது ஒரு காரியமாவது செய்திருக்க முடியுமோ? என்றவாறு. "வாலாட்டும்" என்றது உலக வழக்கச் சொல்லின் அநுகாரம். அஹங்காரப்படுகிறவனை "வாலாட்டுகிறான்" என்பது வழக்கம். "எவ்வாறு செய்கையும்"—அந்தணர்கள் யஜ்ஞ யாகங்களை அநுஷ்டித்து "இந்த்ராய ஸ்வாஹா, ஸோமாய ஸ்வாஹா" என்றிப்படிச் சொல்லி ஹவிஸ்ஸை அளிப்பதெல்லாம் அந்தர்யாமித்வேந எம்பெருமானை உத்தேசித்தேயன்றோ! அந்த இந்திரன் முதலிய தெய்வங்களில் எம்பெருமான் உள்ளுறைகின்றிலனாயின் அத்தெய்வங்களை நோக்கி "ஸ்வாஹா ஸ்வாஹா" என்று சொல்லிச் செய்வது ஒன்றுமில்லையாகுப. அழைப்பு—"இந்த்ராகச்ச ஹரிவ ஆகச்ச மேதாதிதே" (தைத்திரீய ஆரண்யகம் முதல் ப்ரச்நம்) என்றும் "ப்ரஹ்மாண மாவாஹயாமி, வருண மாவாஹயாமி" என்றும் சொல்லுகிறபடியே தேவதாந்தரங்களையழைப்பதும் ஒய்ந்து விடும் என்கை.

# 63. எம்பெருமானுர் அபயப்ரதானம்

ஸ்ரீராமாயணத்தில் அபயப்ரதான மென்பது ஒரு கெட்டம். விபீஷணுழ்வான் மிகுந்த ஆர்த்தியோடு கடற்கரையிலே வந்து சரணுகதி செய்தபோது ஸுக்ரீவ் மஹாராஜர் முதலானேர் அவனை அங்கீகரிக்கலாகாதென்று வலிதாக ஆக்ஷேபித்த காலத்தில் அவனுடைய வுள்ளம் சாலவுமஞ்சிக் கிடந்தது. அச்சமயத்தில் பெருமாள் அவனுக்கு அபய மளித்தார். அப்போது பெருமாளருளிச் செய்த *ஸக்ருதேவ ப்ரபந்நாய* என்கிற சரமச்லோகத்திலே 'அபயம் ததாமி' என்கிற வாக்கிய மிருப்பதனுல் அந்த கெட்டம் அபயப்ரதாந கெட்டமென்று வழங்கப்பட்டு வருகிறது. ஸ்வாமியெம் பெருமானுர் ஒருநாள் ஒரு பெரிய திருவோலக்கத்திலே அந்த கெட்டத்தை மிக விரிவாக உபந்யஸித்தருளா நின்ருர். *த்யக்த்வா புத்ராம்ச்ச தாராம்ச்ச ராகவம் சரணம் கத:* என்கிறபடியே புறம்புண்டானபற்றுக்களையடைய வாஸனையோடே விட்டு விபீஷணுழ்வான் *ஸர்வலோக சரண்யாய ராகவாய மஹாத்மநே, நிவேதயத மாம் க்ஷிப்ரம் விபீஷண முபஸ்த்திதம்* என்று சொல்லி வானர முதலிகளைப் ப்ரார்த்திக்க, அவர்கள் இவ்விபீஷணனை அநுகூலனுகக் கொள்ளாமல் பிரதிகூலனுகவே கொண்டு அவன்மீது கற்களை விட்டெறிவது, பெருமாளிடம் ஆக்ஷேபிப்பது முதலாகப் பல தீமைகளை யிழைக்கத் தொடங்கினுர்கள்—என்னுமிவ்விஷயத்தை ஸ்வாமி உபந்யஸித்தருளா நிற்கையில் அப்போது ஆனந்தமாகக் கேட்டுக்கொண்டிருந்தவர்களில் ஒருவரான பிள்ளையுறங்காவில்லிதாஸர் கோஷ்டியில் நின்று எழுந்து விக்கிவிக்கியழுது தம்முடைய வொரு பெரிய ஸந்தேஹத்தை விண்ணப்பஞ் செய்து அதைப் பரிஹரித்தருளினுலொழிய மேலே கதை கேட்க விருப்பமில்லாமையைக் கூறி நின்ருர்.

அவர் விஜ்ஞாபித்த ஸந்தேஹமாவது—"விபீஷணுழ்வான் உண்மையான பரமபக்தன்; அவனுக்கு ஆர்த்தி முதலிய அதிகார பூர்த்தியில் யாதொரு குறையுமில்லை; ஆகிஞ்சந்யமும் அநந்ய கதித்வமும் கபடமாகவல்லாமல் உண்மையாகவே உண்டாகி நெஞ்சுகனிந்த பக்தியுடன் வந்து சேர்ந்த இவனுக்கே பகவத் கோஷ்டியில் ப்ரவேசம் எளிதாகக் கிடைக்கவில்லை யென்றும், பகவானுக்கு அந்தரங்க மந்திரிகளாக இருந்தவர்களால் மிகுந்த பரிபவமும் ஆக்ஷேபமும் விளைந்தன வென்றும் கண்டால், அவ்விபீஷணுழ்வானுடைய அதிகாரத்தில் நூற்றிலொன்றுகூட இல்லாத எம்போலியர்க்கு பகவதங்கீகாரத்தைக் கனவில் கூடக் காண்பதற்கு ப்ரஸக்தியில்லையன்றே; ஆகவே எம்போலியர் உஜ்ஜீவிக்க வழியுண்டோ இல்லையோ! என்று நெஞ்சு தளும்பி நிற்கின்றது" என்பதாக.

இது எல்லோருக்குமே ஜனிக்கவேண்டிய ஸந்தேஹந்தான். ஆனுல் அந்த ஸமயத்தில் பிள்ளையுறங்கா வில்லிதாஸரொருவர்க்கே ஜனித்தது. இந்த ஸந்தேஹத்திற்குப் பரிஹாரமுறை என்னவென்று தெரிந்துகொள்ள ஒவ்வொருவரும் குதூஹலங்கொள்ள வேண்டியதே யாகும். கேண்மின். எம்பெருமானுர் உடனே அவர்க்குப் பரமத்ருப்திகரமாகப் பணித்த ஸமாதானம் யாதெனில்; விபீஷணுழ்வானைப் போலே நாம் எம்பெருமானைப் பற்றினுலன்றே இப்படி ஸந்தேஹித்து இடிவிழுந்து நிற்கவேண்டும். நாம் எம்பெருமான் கைபார்த்

திருக்கு மவர்களல்லோங்காணும்; உமக்கு நானுண்டு, எனக்குப் பெரிய நம்பி யுண்டு..........''

இதன் கருத்தாவது. எம்பெருமான் மோக்ஷமளிக்கவும் வல்லவன், மேன்மேலும் ஸம்ஸாரத்திலே தள்ளவும் வல்லவன். நிக்ரஹாநுக்ரஹங்களுக்குப்பொதுவான ஸ்வாதந்திரிய முடையவனுகையாலே அவனைப் பற்றினுர்க்கு நெஞ்சு தளும்பியே கிடக்க நேரும். அவனைப் போலன்றிக்கே அநுக்ரஹமே வடிவெடுத்த ஆசாரியர் களைப் பற்றினுர்க்கு ஸந்தேஹ கந்தமுமின்றிக்கே மார்விலே கைவைத்து உறங் கலாம்படியிருக்கும் என்கை. இவ்வர்த்தம் மஹர்ஷிகளின் வசனத்தாலும் தேறி நின்றது. * ஸித்திர் பவதி வா நேதி ஸம்சயோச்யுத ஸேவிநாம், ந ஸம்சயோஸ்தி தத்பக்தபரிசர்யா ரதாத்மநாம் * என்கிற ப்ரமாணத்தை இங்கே அநுஸந்திப்பது. இதன் பொருள்; எம்பெருமானைப் பற்றினுர்க்கு ஸத்கதி ப்ராப்தியாகிற ஸித்தி யுண்டோ இல்லையோ என்கிற ஸந்தேஹமுள்ளது; தத் பக்தர்களாகிற பாகவதர் களைப் பற்றினுர்க்கு அப்படிப்பட்ட ஸந்தேஹம் உதிக்கவே மாட்டாது என்பதாம்.

இங்ஙனே அவரவர்கள் தம் தம் ஆசாரியர்களைப் பணிந்து உஜ்ஜீவித்த லென்பது இருக்கச் செய்தேயும் *தஸ்மிந் ராமாநுஜார்யே குருரிதி ச பதம் பாதி நாந்யத்ர* என்று பூருவர்கள் ஒருமிடருக நிஷ்கர்ஷித்திருக்கையாலே ஆசார்ய ரென்கிற சொல்லுக்குப் பொருளாயிருக்குந் தன்மை எம்பெருமானு ரொருவர்க்கே உரித்தாகவுள்ளதாதலால் அவருடைய திருவடி ஸம்பந்தத்தை அநுதிநமும் சிந்தித்திருப்பார்க்கு விசாரலேசமுமில்லை யென்று தெளிவது.

## 64. ஏசநின்ற வெம்பெருமான் எவ்வுள்கிடந்தானே

திருமங்கையாழ்வார் திருவெவ்வுளூரெம்பெருமானை அநுபவிக்கும் பதிகத் தில் (பெரிய திருமொழி 2-2) *வேயினன்ன தோள்மடவார் வெண்ணெயுண்டானிவ னென்று ஏச நின்ற எம்பெருமான்'' என்றருளிச் செய்கிருர். பழிப்பதும் பரிஹஸிப் பதும் ஏசுவதாகும். எம்பெருமானை அவிவேகிகள் பரிஹஸித்தாலும் பரமபக்தர் கள் அதை அநுவதிப்பதும் பிசகல்லவா? ஆண்டாள் தனது திருமொழியில் (12-8) "கற்றினம் மேய்க்கலும் மேய்க்கப்பெற்றுன் காடுவாழ் சாதியுமாகப் பெற்றுன் பற்றி உரலிடையாப்பு முண்டான்'' என்றருளிச் செய்து உடனே ''பாவிகாளுங் களுக்கேச்சுக் கொலோ'' என்கிருள். 'கண்ணபிரான் கற்றினம் மேய்த்தது முத லானவற்றை நாங்கள் குணமாக நினைத்து உள்குழையாநிற்க இதெல்லாம் பிறர்க்கு ஏசுதற்கிடமாவதே!' என்று வருந்திப் பேசுகிறபடியிது. அப்படியிருக்க 'ஏச நின்ற எம்பெருமான்' என்று முத்திரையிட்டுப் பேசலாமோ ஆழ்வார்? என்ற கேள்வி பிறக்கும். *பாவிகாளுங்களுக் கேச்சுக்கொலோ என்ற விடத்துப் பெரியவாச்சான்பிள்ளை வ்யாக்யான ஸ்ரீஸூக்தி. ''நீங்கள் ஏதேனும் சிசுபாலன் பிறந்த லக்னத்தில் பிறந்தீர்களோ?'' என்பது. இதன் ஆழ்ந்த கருத்தை அறிவதரிது. எம்பெருமானுடைய செய்கைகளைப் பரமபக்தர்களும் பேசுகிருர்கள், சிசுபாலஜ்ஞாதி களும் பேசுகிருர்கள். பேச்சில் சிறிதும் வாசியில்லை. பாவபந்தத்தில்தான் வாசி. நம்மாழ்வார் பெரிய திருவந்தாதியில் *ஏசியே யாயினும் ஈன்துழாய் மாயனையே பேசியே போக்காய் பிழை* என்கிருர். இதுவொரு அற்புதமான அருளிச்செயல்.

பக்தர்களுக்கு ஏச வேண்டுமென்கிற எண்ணம் சிறிது மிராது. அவர்களின் ஏச்சுப் பேச்சும் துதிப்பேச்சோடொக்குமத்தனை. திருவாய்மொழியில் (6-2) *மின்னிடை மடவார் பதிகத்தின் நிகமனப்பாசுரம் மிக வாச்சரியமானது. *ஆய்ச்சியாகிய அன்னையால் அன்று வெண்ணெய் வார்த்தையுள் சீற்றமுண்டழு கூத்தவப்பன்* என்றருளிச் செய்து, உடனே *குருகூர்ச்சடகோபன் ஏத்திய தமிழ்மாலை என்கிறார். ஏசிய தமிழ்மாலையைத்தான் ஏத்திய தமிழ்மாலை' என்றார். ஆக பக்தர்களின் ஏசுதலும் ஏத்துதலும் பர்யாயமத்தனை. *புகழ்வோம் பழிப்போம் புகழோம் பழியோம் இகழ்வோம் மதிப்போம் மதியோ மிகழோம்* என்ற பெரிய திருவந்தாதிப் பாசுரத்திற்கு நம்முடைய திவ்யார்த்த தீபிகையை விரியக்கண்டு களிப்பது.

## 65. ஏதலர் முன்னா என் நினைந்திருந்தாய்

ஆழ்வார் தாமான தன்மையில் பேசுவது தவிர தலைமகள் பாசுரமாகவும் தாய்பாசுரமாகவும் தோழிபாசுரமாகவும் பேசியுள்ளார் என்பதை பகவத் விஷய ரஸிகர்களறிவர். இது நம்மாழ்வார்க்கும் திருமங்கையாழ்வார்க்கு மொக்கும். திருமங்கையாழ்வார் தமது திருமொழியில் (2-7) திருவிட வெந்தைப் பதிகத்தில் ஐந்தாவது பாசுரத்தில் "ஏதலர் முன்னா வென் நினைந்திருந்தாய் இடவெந்தை யெந்தை பிரானே" என்கிறார். (ஏதலர்-பகைவர்) இதனால் அவர் தமக்குச் சில சத்ருக்களுள்ளார் போலத்தெரிகிறது. நம்மாழ்வார் தலைமகள் பாசுரமாகப் பேசும் பதிகத்தில் (திருவாய்மொழி 8-2-1) "நங்கள் வரிவளையாயங்காளோ நம்முடையேதலர் முன்பு நாணி" என்பதனால் தலைமகளான தனக்குச் சில சத்துருக்கள் இருப்பதாகக் காட்டப்படுகிறது. தாய் பாசுரமான *கடல்ஞாலம் செய்தேனும் பதிகத்தில் "உற்றீர்கட் கென்சொல்லிச் சொல்லுகேன் யான்" என்பதனால் சிலரை உறவினராகக் கொள்ளப்படுவது காட்டப்பட்டது. தலைமகள் பாசுரமான *மல்லிகை கமழ் தென்றலில் "யாமுடைத் துணையென்னும் தோழிமாரும் என்கிற பாசுரத்தினால் தனக்கு உறவு முறையார் உள்ளதாகக் காட்டப்படுகிறது. ஆக இப்பாசுரங்களினால் தாயானவள் தனக்குச் சில பகைவரும் சில உறவினரும் உள்ளதாகவும், மகளானவள் தனக்குச் சில பகைவரும் சில உறவினரும் உள்ளதாகவும் காட்டினதாகத் தெரிகிறது. தாயாகவும் மகளாகவும் பேசுவது ஆழ்வார் தாமேயாயினும் "ஸம்பந்தோபாய பலங்களில் உணர்த்தி துணிவு பதற்றமாகிற ப்ரஜ்ஞாவஸ்தைகளுக்குத் தோழி தாயார் மகளென்று பேர்" என்கிற ஆசார்ய ஹ்ருதய ஸ்ரீஸூக்தியின்படி பாவபந்தத்தில் வாசியைக் காட்டுவதற்காகவே தாய் பாசுரமென்றும் மகள் பாசுரமென்றும் அவதரித்திருப்பதால் தாயான ஸமாதியில் பகைவர் யார் உறவினர் யார் என்பதையும், தலைமகளான ஸமாதியில் பகைவர் யார் உறவினர் யார் என்பதையும் நாம் பகுத்தறிய வேண்டியது அவசியமாகும். இது தன்னை ஆசார்ய ஹ்ருதயகாரரே விளங்கவைக்கிறார். "தாயாரேதலர் உற்றீர்களென்னும் ஸாத்ய ஸித்த ஸாதந நிஷ்டரை; மகள் நம்முடையேதலர் யாமுடைத் துணையென்னும் ஸித்தஸாதந ஸாத்யபரரை." (இரண்டாம் ப்ரகரணம்.) இதன் கருத்தாவது. தாயானவள் "செய்த்தலை எழுநாற்றுப்போல் அவன் செய்வன செய்து கொள்ள" என்றநுஸந்தித்து பதற்றத்தை ஸஹியாதவளாகையாலே

பதற்றத்தைக் காட்டுகின்ற ஸாத்யோபாய பரரை சத்ருக்களாகவும் பதற்றத்தைக் கொள்ளாதே ஸித்தோபாய நிஷ்டையிலுள்ளவர்களை உறவினராகவும் கொள்கிருள். இதற்கு நேர் விபரீதமான நிலைமை தலைமகளுடையது. சுருங்கச் சொல்லில் அத்யவஸாயத்தின் திடமான தன்மையைத் தாய்பாசுரம் விளக்கும், பதற்றத்தில் ஊற்றத்தை மகள் பாசுரம் விளக்குமென்க. இதை யுட்கொண்டே பிள்ளை லோகாசாரியர் முமுக்ஷுப்படி த்வயப்ரகரணத் தொடக்கத்தில் வைஷ்ணவாதிகாரிக்கு அவச்யாபேக்ஷிதமானவற்றைச் சொல்லும் சூர்ணையில் "பேறுதப்பாதென்று துணிந்திருக்கையும் பேற்றுக்கு த்வரிக்கையும்" என்று சேராச்சேர்த்தியான இரண்டையும் சேர்த்துப் பேசினர். பேறு தப்பாதென்று துணிந்திருக்கும் நிலைமை தாயினுடையது. பேற்றுக்கு த்வரிக்கும் நிலைமை மகளுடையது.

## 66. 'ஏபாவம் பரமே' என்ற பாசுரத்தின் பொருள்

இது திருவாய்மொழியில் (2—2—2) பாசுரத் தொடக்கம். "திண்ணிதா மாறன் திருமால் பரத்துவத்தை நண்ணியவதாரத்தே நன்குரைத்த வண்ணம்" என்ற திருவாய்மொழி நூற்றந்தாதிப் பாசுரப்படியே ஸம்ஸாரிகளுக்கு பகவத் பரத்வத்தை உபதேசிக்கிற பதிகமிது. விஷயத்தை உகந்து சொல்லுவதற்கு முன்னே "ஏ பாவம் பரமே" என்று ஆழ்வார் தம் முடிமேல் மோதிக்கொள்வதைக் குறிக்கொள்ளவேணும். மாணிக்கத்திற்கும் களிமண்ணுக்குமுள்ள வாசியை ஒருவன் எடுத்துரைக்க வேணுமோ? அவரவர்கள் அநாயாஸமாகத் தெரிந்துகொள்ள வேண்டிய விஷயத்தையும் நான் எடுத்துக்கூற வேண்டும்படி யாவதே! என்கிற வருத்தத்தைக் காட்டுமிது. 'பரமே' என்பதற்கு எனக்கிது தலைச் சுமையாவதே என்பது பொருள். எம்பெருமானை அநுபவிப்பதற்கென்று பிறந்த எனக்கு மூடர்களைத் தேற்ற வேண்டுவதும் ஒரு தலைச்சுமையாக வந்து நிற்கின்றதே என்கிற வருத்தத்தைக் காட்டுகிறபடி. "பகவத் குணாநுபவம் பண்ணுகை யொழிய இது நமக்கு பரமாவதே" என்பது ஈடு.

## 67. "ஏபாவம் பயனன்றுகிலும் சேராது"

ஆசார்ய ஹ்ருதயத்தில் "ப்ரஹ்மநிஷ்டரும் ஸம்வத்ஸர வாஸிகளுமாகில் ஏபாவம் பயனன்றுகிலும் சேராது." என்பது ஒரு சூர்ணை. (மூன்றும் ப்ரகரணம் 57) ஸம்ஸாரிகளைத் திருத்திப் பணிகொண்ட ஆழ்வாருடைய கருணையின் நிர்ஹேதுகத்வத்தை நிருபித்த நளுபடைவிலுள்ள சூர்ணிகை இது. கீழே நண்ணுதார் மெய்யிலூன் ஆசை, இச்யாதி சூர்ணையில் "...... ......வம்மின் விரோதமினைச் சொல் எவ்வுயிர்க்குமறியவென்று அடைவுகெட அதபஸ்கர்க்கு உபதேசிக்கிறது ஞாலத்தார் பந்த புத்தியும் அநர்த்தம் கண்டு ஆற்றுமையும் மிக்க க்ருபையுமிறே" என்றருளிச் செய்யப்பட்டது. இதனால் ஆழ்வார் அடைவிலே உபதேசித்தருள வில்லையென்றும் உபதேசங்கேட்ட சிஷ்யர்கள் அடைவிலே நின்றவர்களல்லர் என்றும் தெரிவிக்கப்பட்டதாகிறது. உபநிஷத்தில் "பரீக்ஷ்ய லோகாந் கர்மசிதாந் ப்ராஹ்மணோ நிர்வேதமாயாத்......தத் விஜ்ஞாநார்த்தம் ஸ குருமேவாபிகச்சேத் ஸமித்பாணி: ச்ரோத்ரியம் ப்ரஹ்மநிஷ்டம்" என்கிறபடியே

சிஷ்யர்கள் உபஸத்தி பண்ணினதாகவும் (அதே உபநிஷத்தில் மேலே) "ப்ரோவாச தாம் தத்வதோ ப்ரஹ்ம வித்யாம்" என்று ஓதினபடியே ஆழ்வாரும் அடைவிலே நின்று உபதேசித்ததாகவும் கொள்ளலாகாதோ என்கிற சங்கைக்குப் பரிஹாரமாக மேலே குறித்த சூர்ணிகை அவதரித்தது. ஆழ்வார் ப்ரஹ்மநிஷ்டராகில் உபதேசம் கேட்டவர்கள் ஸம்வத்ஸர வாஸிகளாகில் 'ஏபாவம் பரமே' என்கிற ஆழ்வார் பாசுரமும் "பயனன்றாகிலும் பாங்கலராகிலும்" என்கிற மதுரகவி யாழ்வாரின் பாசுரமும் பொருந்தாது என்பது சூர்ணையின் பொருள். இதிலிருந்து ஆழ்வார் ப்ரஹ்மநிஷ்டரல்லரோ என்ற கேள்வி பிறக்கும். "ச்ரோத்ரியம் ப்ரஹ்மநிஷ்டம்" என்கிற ச்ருதிவாக்யம் எவ்விடத்திலுள்ளது, அது எதற்காக ஓதப்பட்டது? என்பதை ஆழ்ந்து நோக்கினல் இந்தக் கேள்வி பிறவாது. ஆழ்வார் அடைவுதப்பாத சிஷ்யர்களால் உபஸத்திபண்ணப்பட்ட ப்ரஹ்ம நிஷ்டரல்லர், நிர்ஹேதுக க்ருபாசாலியான ப்ரஹ்மநிஷ்டர் என்பது தேர்ந்த பொருள். ஆக நிர்வேதமில்லாதாரும் அநுவ்ருத்தியில்லாதாருமான ஸம்ஸாரிகளுக்கு ஆழ்வார் உபதேசித்தது தம்முடைய நிர்ஹேதுக க்ருபையினலே என்பது தேறிற்று.

## 68. ஏழையேதலன் கீழ்மகனென்னுதிரங்கி

திருமங்கையாழ்வார் தமது திருமொழியில் ஐந்தாம்பத்தில் திருவரங்கம் பெரிய கோயிலுக்கு மங்களாசாஸனமாக ஐந்து பதிகங்கள் இட்டருளுகிறுர். அவற்றுள் கடைப்பதிகம் *ஏழையேதலன் என்பது. இதில் நிகமனப் பாசுரம் ஒன்றொழிய மற்ற ஒன்பது பாசுரங்களில் எம்பெருமானுடைய நிர்ஹேதுக விஷயீகாரத்திற்கு இலக்கான ஒன்பது புருஷர்களின் பெருமை கூறப்படுகின்றது. *ஏழையே தலன் கீழ்மகன் என்னுதிரங்கி என்கிற முதற்பாசுரத்தில் குஹப்பெருமாளுடைய விஷயீகாரம் பகரப்படுகிறது. அதில் ஏழையென்றது, ஏதலனென்னது, கீழ்மகன் என்னது இரங்கி இன்னருள் சுரந்து என்கிற ஸ்ரீஸூக்தி ஸன்னிவேசம் உள்ளுறைந்தநுபவிக்கத் தக்கது. "க்ஷத்ரிய ஜாதியில் ஸூர்ய குலத்தில் இக்ஷ்வாகு வம்சத்தில் திருவவதரித்தவனும் சக்ரவர்த்தியின் திருக்குமாரனும் ஸகலைச்வர்ய ஸம்பந்நனும் மஹாபுத்திமானும் பகைவரிடத்தும் அன்புகொள்பவனுமான இராமபிரான் குஹனை நோக்குங்கால், இவன் இழிவான வேடச் சாதியனென்றும், அதனல் பகுத்தறிவில்லாத அவிவேகி யென்றும், அச்சாதிக்கு இயல்பான கொடுமைக் குணத்தினல் எல்லாவுயிர்களோடும் பகைமை கொள்பவனென்றும் இகழ்ச்சிகொள்ள வேண்டியது ப்ராப்தமாயிருந்தும் அங்ஙனம் இகழ்ச்சி கொள்ளாது தனது பெருமைக் குணங்களையும் பாராமல் அவனுடன் கலந்து பரிமாறின கருணையை மிகவும் பாராட்டி யெடுத்துக்கூறி, 'அவ்வாறே அடியேனிடமுள்ள இழிகுணங்களையும் பொருள் செய்யாது என்னையும் ஆட்கொண்டருள்வன் எம்பெருமான்' என்னும் நம்பிக்கை கொண்டு தாம் அவன் திருவடிகளிற் சரண்புகுந்தமையை வெளியிடுகிறுர் ஆழ்வார். ஏழை என்னுஞ் சொல்லுக்கு 'தரித்திரன்' என்னும் பொருளை ஸாமாந்யமாக உலகமுணரும். ஆனல் அறிவில்லாதவனையே ஏழை என்பது நூற்கொள்கை. "நுண்ணுணர்வின்மை வறுமை அஃதுடைமை, பண்ணப்பணைத்த பெருஞ் செல்வம்." என்பது குறளாதலால் அறிவின்மையையே ஏழ்மையாகக் கொள்வது சிறக்கும்.

## 69. ஏத்துகின்றேம் நாத்தழும்ப இராமன் திருநாமம்

திருமங்கையாழ்வார் திருமொழியில் பத்தாம்பத்தில் மூன்றும் பதிகத் தொடக்கமிது. இதற்குக் கீழே சென்ற இரண்டாம் பதிகமும் இப்பதிகமும் பரம விலக்ஷணமானவை. கீழே *ஒரு நல் சுற்றம் என்னும் முதல் திரு மொழியில் ஆழ்வார்க்கு இக்கொடுவுலகத்திநின்றும் நலமந்தமில்லதோர் நாடாகிய பரமபதத்திற்குச் செல்லவேணுமென்னும் விருப்பம் கிளர்ந்து, 'எம்பெருமான் இனி நம்முடைய அபிமதத்தைத் தலைக்கட்டியல்லது நில்லான்' என்கிற நிச்சயமும் தோன்றிப் பரமபதத்திற்குப் பயணம் புறப்படுவ தாகவே பாரிப்புக்கொண்டு, பிறந்தகத்தில் நின்றும் புக்ககம் போகப் புறப்படு கின்ற பெண்பிள்ளை தான் நெடுநாள் வஸித்தவிடத்திலே தங்களோடு மிகவும் முகம் பழகியிருந்த பரமப்ரேமாஸ்பதமான சில பெண்பிள்ளைகளைச் சென்று பணிந்து நங்காய்! நான் போய்வருகிறேன்; மாதே! நான் போய்வருகிறேன், என்று சொல்லி வருதற்குச் சில குறடுகள் ஏறியிறங்குமா போலே ஆழ்வாரும் தம் புக்ககமாகிய பரம பதத்தின் பயணத்திற்குப் பூர்வாங்கமாகத் தமது மிக்க ஈடுபாட்டிற்கிடமான சில திருப்பதிகளிலே சொல்லிக் கொள்வதாக நுழைந்து புறப்பட்டார்.

பெண்பிள்ளை விவாஹக் கோலங்கள் செய்து கொண்டு தன்னுலாகக் கூடிய ஸந்நாஹங்களெல்லாம் செய்து முடித்தாலும் தாலிகட்டுமவன் தகவிலனுமாகில் அந்த ஸந்நாஹமெல்லாம் பழுதேயாமாப்போலே இன்னமும் இவ்வாழ்வாரைக் கொண்டு லோகோஜ்ஜீவநமாகப் பல பாசுரங்கள் பாடுவிக்கத் திருவுள்ளம் பற்றின எம்பெருமான் இவருடைய அபிமதத்தைச் செய்து தலைக்கட்டாதே தன்னுடைய திவ்யாவதார சேஷ்டிதங்களையே அநுபாவ்யமாகக் காட்டிக் கொடுத்தான். அவற் றிலே, இலங்கைப் போர்க்களத்தில் இராவணன் உயிர் துறக்குமளவாய், மாண்டு போனவர்களில் மிகுந்திருந்த அரக்கர்களும் தங்கள் தங்கள் பிராணனுக்கு மன்றாடு மளவான நிலைமையில் பெருமாளுடைய வெற்றிச் செல்வத்தை யெடுத்துரைத்துப் பாசுரமிட்டுப் பேசி மகிழ வேணுமென்னும் ஆசை ஆழ்வார்க்குக் கிளர்ந்தது. அந்த வெற்றியைத் தம்முடைய வாயாலே பேசுவதிலுங் காட்டில் தோற்றுப்போன ராக்ஷஸர்களின் வாயாலே பேசியநுபவித்தல் பாங்கு என்று திருவுள்ளம் பற்றினர்.

தாமான தன்மையிலிருந்து கொண்டும் அந்த வெற்றியைப் பேசலாமாயி னும் 'நீராடவாராய்', 'பூச்சூடவாராய்', 'காப்பிடவாராய்' இத்யாதி பாசுரங்களைப் பெரியாழ்வார் தம் வாயாற் பேசாமல் யசோதை சொல்லும் பாசுரமாகப் பேசினுப் போலே இவரும் அந்த வெற்றியைப் பேசுவதற்கு இட்டுப்பிறந்த அரக்கர் பேசும் பாசுரமாகவே அருளிச் செய்கிருர். ஆனுலும், மஹாபாபிகளான ராக்ஷஸர்களின் நிலைமையை இவர் ஏறிட்டுக் கொள்ளுதல் தகுதியன்றே என்று சிலர் சங்கிக்கக் கூடும்; விபீஷணுழ்வான் ராக்ஷஸ யோநியிற் பிறந்திருந்தாலும் ஹ்ருதயசுத்தியைக் கொண்டு அவர் எப்படி உத்தேச்யராகிருரோ, அப்படியே அந்த அரக்கர்களும் தங்களுடைய தோல்வியையும் பெருமாளுடைய வெற்றியையும் பேசுகிருர்களென் னுங் காரணங்கொண்டு இவர்களுடைய தன்மை ஒருவாறு உத்தேச்யமாகக் குறை யில்லை; உண்மையில் விபீஷணுழ்வானுக்கும் இவ்வரக்கர்கட்கும் நெடுந்தூரமுண்டு; இராவணன் சக்தனுன நிலைமையிலிருக்கும் போதே அவனைவிட்டுத் தொலைத்து

ஸ்ரீ ராமகோஷ்டியில் அந்வயித்து உய்வு பெற்றவர் விபீஷணுழ்வான்; இவ்வரக்கர் களாவென்னில் இராவணன் மாண்டொழியுந் தருணத்திலும் ஸ்ரீ ராமபக்தர்களின் கோஷ்டியிலே அந்வயித்து உய்வு பெருதவர்கள். 'இராவணனையும் மற்றும் பல அரக்கர்களையும் போலே எங்களையுங் கொன்றெழிக்க வேண்டா' என்று தங்கள் உயிர்க்கு மன்றுடுகிறுர்களத்தனையேயன்றி விபீஷணுழ்வானைப் போலே உண்மையான சேஷத்வத்திற்கு இசைந்து தொழுகின்றுர்களல்லர். ஆயினும் ஆழ்வார்க்கு இவ்விஷயத்தில் ஆராய்ச்சி செல்லவில்லை. ஏதேனுமொரு படியாலே பெருமாளுடைய வெற்றியைப் பேசுகிறுர்களென்னு மிவ்வளவே கொண்டு உகந்து அவர்களின் நிலைமையைத் தாம் ஏற்ட்டுக் கொள்ளுகிறுரென்க. இவ்விடத்திலே பெரிய வாச்சான்பிள்ளை ஸ்ரீஸூக்திகாணமின்;—''தமக்கு அபிமதமான ராமவிஜயத்தை எதிரிகள் மேலெழுத்திட்ட பாசுரத்தாலே அநுபவிக்கிருர். அங்குத்தை விஜயத்துக்கு இலக்காய்த் தோற்ற ராக்ஷஸர் தசை பிறந்து, பிராட்டிமார் தசை பிறந்து பேசுமாபோலே தாபான தன்மை தோற்றுதே, தோற்ற ராக்ஷஸர் பாசுரத்தாலே ராமவிஜயத்தைப் பேசி அநுபவிக்கிருர்'' என்று.

ப்ரக்ருத *ஏத்துகின்றும் பதிகமும் இலங்கையரக்கர்களின் பாசுரமாய்ச் செல்லுகிறது. தோற்றவர்கள் தங்கள் தோல்விக்கு ஈடாக ஆடுவதொரு கூத்துக்குக் **சூழமணிதூரம்** என்று பெயர்போலும்! அக்கூத்தையாடுகின்ற அரக்கர்களின் நிலைமையிலே நின்று ஆழ்வார் ஸ்ரீராம விஜயத்தைப் பேசியநுபவிக்கிருராயிற்று.

# 70. ஐம்பெரும் பாதகர்காள்

சாஸ்த்ரங்களில் பஞ்சமஹாபாதகர்கள் என்று சிலர் சொல்லப்பட்டுள்ளனர். ஸ்வர்ணஸ்தேயம், ஸுராபாநம், குருத்ரோஹம் முதலியன மஹா பாதகங்களெனப்படும். அந்த பாதகர்களைக் காண்பதும் அவர்களோடு பேசுவதும் மஹா பாபமென்று நூல்கள் கூறும். மேலே எடுத்த ''ஐம்பெரும் பாதகர்காள்'' என்பது நாச்சியார் திருமொழியில் *சிந்துரச் செம்பொடிப்போல் பதிகத்தின் மூன்றும் பாசுரத்தின் மூன்றுமடியாகும். அங்கு பஞ்சமஹா பாதகர்களாக யாரைச் சொல்லுகிறுளென்பது நோக்கப்படவேண்டும். ''பைம்பொழில்வாழ் குயில்காள் மயில்காள் ஒண்கருவிளைகாள் வம்பக்களங்கனிகாள் வண்ணப்பூவை நறுமலர்காள்'' என்று ஐந்து பொருள்களை 'ஐம்பெரும்பாதகர்காள்!' என்று விளித்து 'அணிமாலிருஞ்சோலை நின்ற எம்பெருமானுடைய நிறம் உங்களுக்கென் செய்வதே' என வருந்திப் பேசுகிறுள். கீழே விண்ணீலமேலாப்புப் பதிகத்தில் திருவேங்கடமுடையான் ஸன்னிதிக்கு மேகத்தைத் தூது விட்டாள். சுப ஸமாசாரத்தை எதிர்பார்த்திருந்தாள். அது கிடைக்காததோடு விபரீதமுமாயிற்று. அந்த மேகங்கள் நன்றாக மழைபொழிந்து போயின. மாரிகாலத்தில் பூக்கக்கூடிய பூக்களெல்லாம் பூத்தன. அக்காலத்தில் களித்துத் திரியுமவையான மயில் முதலிய சில பிராணிகளும் ஸம்ப்ரமத்தோடு வந்துலாவப்புக்கின. அவை யெல்லாம் எம்பெருமானுடைய திருமேனி நிறத்தை நினைவூட்டுவனவா யிருந்தபடியால் அவ்வாற்றாமையே *சிந்துரச் செம்பொடிப்போல் என்னும் பதிகமாக வடிவெடுத்திருக்கிறது.

(எம்பெருமானுடைய நிறம் உங்களுக்கென்செய்வதே) என்னை உயிர்க்கொலை செய்கின்ற அவனுடைய நிறத்தை நீங்கள் ஏதுக்காக ஏறிட்டுக் கொண்டீர்கள்? என்னை ஹிம்ஸிக்க வேண்டுமென்றே நீங்கள் அவனது நிறத்தை ஏறிட்டுக் கொண்டீர்கள்போலும் என்கை.

71. *ஐயபுழுதியுடம்பளைந்து:* பெரியாழ்வார் திருமொழியில் மூன்றும்பத்தில் ஏழாம் பதிகத்தின் தொடக்கமிது. கீழ் *வண்ணமாடங்கள் தொடங்கி இருபத்தைந்து பதிகங்களால் (அதாவது இருநூற்றறுபது பாசுரங்களால்) க்ருஷ்ணவதார சேஷ்டித ரஸங்களை அத்புதமாக அநுபவித்துத் தலைக்கட்டினர் ஆழ்வார். இவருடைய திருமகளாரான ஆண்டாள் "போகத்தில் வழுவாத புதுவையர் கோன்" என்று அருளியதற்குச் சேர க்ருஷ்ணவதார அநுபவத்தில் வழுவாதவர் இவ்வாழ்வார் ஒருவரேயாவர். இவரருளிய திருமொழியில் இரண்டாம்பத்தில் வெண்ணெய் விழுங்கிப் பதிகம் தொடங்கி மூன்றும்பத்தில் *நாவலம் பெரிய தீவினில் வாழும்* பதிகமளவாக எட்டுப் பதிகங்களிலுள்ள வநுபவம் அநுபவரஸிகர்களின் நெஞ்சை நீர்ப்பண்டமாக உருக்குமதாம். அது தன்னிலும் * சீலைக் குதம்பையொருகாது * தழைகளும் தொங்கலும் ததும்பியெங்கும் *நாவலம் பெரிய தீவினில் வாழும் என்னுமிடம் மூன்று பதிகங்களின் சுவை 'நெஞ்சால் நினைப்பரிதால்' என்னும் கணக்கிலேயுள்ளது. பராசரபாராசர்யாதிகளான முனிவர்களும் க்ருஷ்ணவதாரத்தில் மிக்க ஈடுபாடுடையவர்களாயினும் பெரியாழ்வாருடைய அநுபவத்தில் ஏகதேசமும் அவர்களுக்கு இலக்காகவில்லை நிற்க, க்ருஷ்ணவதார அநுபவங்களைத் தலைக்கட்டின இவ்வாழ்வார் திருவாய்மொழியின் சாயையிலேயும் சிறிது அநுபவிக்க வேணுமென்று *ஐயபுழுதியுடம்பளைந்து* நல்லதோர் தாமரைப் பொய்கை என்னுமிரண்டு பதிகங்களை விலக்ஷணமாகப் பாடுகிறார். நம்மாழ்வாருடைய அநுபவத்தில் தாமான தன்மையிற் பேசுவதுதவிர தலைமகள் பேச்சாகவும், தாய்ப்பேச்சாகவும், தோழிப் பேச்சாகவும் பேசுகிறபடியைத் திருவாய்மொழியில் கண்டிருக்கிறோமன்றோ! அதில் தாய்ப்பேச்சாகப் பேசுவதை இங்குப் பெரியாழ்வார் கொள்ளுகிறாராயிற்று. உண்மையில் பெரியாழ்வார்க்கு ஒரு தாயார் இருந்து அவள் பேசுகிறாளென்பதில்லை. ஆழ்வார்தாம் தம்மை மகள் ஸ்தாநத்திலே வைத்துத் தமது நிலையைத் தாயார் சொல்வதாக அமைக்கிற பாசுரங்களாம் இவை. இங்கு மகளாகச் சொல்லப்படுவது பெரியாழ்வார்தம்மையே என்பது உணரத் தக்கது பெரியாழ்வார்க்கு ஆண்டாள் என்னும் ஒரு திருமகளார் உண்மையில் உண்டாதலால் அவளைப்பற்றி ஆழ்வார் கூறுவதாகப் பலர் மயங்குவர். மேற்பதிகத்தில் "ஒருமகள் தன்னை யுடையேன் உலகம் நிறைந்த புகழால் திருமகள்போல வளர்த்தேன் செங்கண்மால் தான் கொண்டுபோனான்" என்கிற பாசுரம் அன்னவர்களின் மயக்கத்துக்குக் கைகொடுக்கும்போலும்! அங்கு "ஒருமகள் தன்னை யுடையேன்" என்றது 'ஆண்டாளாகிற மகளையுடையேன்' என்றபடியன்று. பெரியாழ்வார்தாமே அங்கு மகளாகச் சொல்லப்படுகிறாள். ஆக, *ஐயபுழுதி பதிகத்திலும் *நல்லதோர் தாமரைப்பதிகத்திலும் சொல்லப்படுகிற பகவதநுபவம் பெரியாழ்வாருடையதேயாகும். இரண்டு பதிகத்தின் நிகமனப் பாசுரங்களில் "தாயுரை செய்ததனை.........விட்டுசித்தன் சொன்னமாலை" என்றும் "தாயவள் சொல்லிய சொல்லைத் தண் புதுவைப்பட்டன்சொன்ன" என்றும் ஆழ்வார்தாமே விளக்கியிருப்பது கொண்டு தெளியலாம். நம்மாழ்வாருடைய *உண்ணுஞ்சோறு பதிகமும் இங்கு நினைக்கத்தக்கது.

**72. ஐயார்கண்ட மடைக்கிலும் நின் கழலெய்யாதேத்த.** திருவாய்மொழியில் (2-9) *எம்மாவீட்டுப்பதிகத்தில் மூன்றும் பாசுரமிது. "ஐயார் கண்டமடைக்கிலும் நின் கழலெய்யாதேத்த அருள்செய் எனக்கே" என்று ஆழ்வார் எம்பெருமானைப் பிரார்த்திக்கிறார். (ஐயார் கண்டமடைக்கிலும்) நெஞ்சிலே கோழை கட்டிப்போய்த் தடுபாடுகிற நிலைமை நேர்ந்தாலும் உன் திருவடிகளிலே பத்தி குலையாமே துதிக்கும்படி செய்தருளினுற்போதும் என்கிறார். ஐ என்று கோழைக்குப் பெயர். ஆர் விகுதி இழிவுப்பொருளது. "கோழைப் பையலார்" என்பது நம்பிள்ளை ஸ்ரீஸூக்தி. ஜிதந்தா ஸ்தோத்ரத்தில் "துர்க்கதாவபி ஜாதாயாம் த்வத்கதோ மே மநோரத:, யதி நாசம் ந விந்தேத தாவதாஸ்மி க்ருதீ ஸதா" என்றுள்ளது. "எம்பெருமானே! எனக்கு எப்படிப்பட்ட துர்க்கதி நேர்ந்த காலத்தும் சிந்தனை மாத்திரம் உன்னை விட்டு அகலாதிருக்குமாயின் அவ்வளவே நான் உய்யப் போதுமானது." என்பது மேற்குறித்த ச்லோகத்தின் கருத்து. அவ்வகையிலே அருளிச் செய்த பாசுரமிது. முகுந்தமாலையில் "ப்ராண ப்ரயாண ஸமயே கபவாதபித்தை: கண்டாவரோதந விதௌ ஸ்மரணம் குதஸ் தே!" என்றார் குலசேகரர். "எய்ப் பென்னை வந்து நலியும் போது அங்கேதும் நானுன்னை நினைக்க மாட்டேன்" என்றார் பெரியாழ்வார். எய்ப்பு வந்து நலியும் போதும் திருவடிகளின் நினைவு இடையறுதிருக்கவேண்டுமென்பது நம்மாழ்வாருடைய வேண்டுகோள்.

**73. ஐங்கருவி கண்ட வின்பம்-ஒழிந்தேன்.** திருவாய்மொழியில் (4-9-10) "கண்டு கேட்டுற்று மோந்துண்டுழலும் ஐங்கருவி கண்ட வின்பம் தெரிவரிய அளவில்லாச் சிற்றின்பம் ஒண்டொடியாள் திருமகளும் நீயுமே நிலா நிற்பக் கண்டசதிர் கண்டொழிந்தேன் அடைந்தேன் உன் திருவடியே" என்பதொரு பாசுரம். திருநாட்டிலே சென்று பெருமாளும் பிராட்டியுமான சேர்த்தியை நேராக அநுபவித்து அப்போது அநுஸந்திக்கவேண்டிய பாசுரம் இது. அந்த பரமபத ஸேவை நம்மாழ்வார்க்கு இவ்விபூதியிலேயே கிடைத்ததனால் இங்கிருந்தே அவ்வநுபவத்தைச் செய்தருளுகிறாரிப்பாட்டால். ஐங்கருவிகண்ட வின்பமாவது கண்ணாலே சில ரூபங்களைக் கண்டும் காதாலே சில சப்தங்களைக் கேட்டும், த்வகிந்த்ரியத்தாலே சிலவற்றைத் தொட்டும் மூக்காலே சிலவற்றை மோந்தும், நாவினால் சிலவற்றை உட்கொண்டும் இங்ஙனே பஞ்சேந்த்ரியங்களாலும் பெறப்படுகிற விஷயஸுகங்களாகும். இதையெல்லாம் ஒழிந்தேன் என்றவாறு. "ஜிஹ்வே கீர்த்தய கேசவம் முரரிபும் சேதோ பஜ ஸ்ரீதரம்" இத்யாதி முகுந்தமாலா ச்லோகத்தின்படியே போது போக்குவார்க்கு ஐங்கருவி கண்ட வின்பம் தன்னடையே ஒழிந்ததாகு மன்றே? இதற்கு மேலே "தெரிவரிய வளவில்லாச் சிற்றின்ப" மென்றது கைவல்யாநுபவ ஸுகத்தையாகும். பகவதநுபவமின்றிக்கே தன்னைத் தானே அநுபவிப்பது கைவல்யமாதலால் அதைச் சிற்றின்பமென்றது மிகப் பொருந்தும். இவ்வாழ்வார் தாமே மேலே (6-9-10) "குறுகா நீளா இறுதிகூடா" என்னும் பாசுரத்தில் "அளவிலின்பம்" என்ற சொல்லால் இச்சிற்றின்பத்தைப் பேசியது எதிர்மறையிலக்கணையாலாகும். (விபரீத லக்ஷணை)

**74. ஐந்து பைந்தலையாடரவணை மேவி.** திருவாய்மொழியில் (2—6—5) *உய்ந்துபோந்தென்னுலப்பிலாத என்னும் பாசுரத்தின் பின்னடி இது. ஐந்து தலைகளையுடைய திருவனந்தாழ்வான் மேல் பள்ளிகொண்டருள்கின்ற எம்பெருமான் என்று இங்குக் கூறப்படுகின்றது. *ஐந்தலைவாய் நாகத்தணை* என்று திருமழிசைப்பிரானும் அருளிச்செய்கிறார். ஐந்து தலைகளையுடையவன் அனந்தாழ்வான் என்று பலவிடங்களில் வருவதுபோல ஆயிரம் தலைகளையுடையவன் என்றும் பலபாசுரங்களில் வருகின்றன. பெரியாழ்வார் தமது திருமொழியில் ''ஆயிரந்தோள்பரப்பி முடியாயிர மின்னிலக ஆயிரம் பைந்தலைய அனந்த சயனன் ஆளும் மலை'' என்றருளியுள்ளார். இவற்றில் பரஸ்பரவிரோதசங்கை பண்ணுவது பாங்கன்று. திருவனந்தாழ்வான் நித்யஸூரிகளில் தலைவர். ''ஸ ஏகதா பவதி த்விதா பவதி த்ரிதா பவதி......அநேகதா பவதி'' என்றோதியுள்ளபடி எவ்வகையாகவும் வடிவெடுக்க உரிமையுண்டு.

**75. ஐவாயரவில் துயிலமுதை.** பிள்ளைப்பெருமாள் ஐயங்காருடைய திருவரங்கக் கலம்பகத்தில் ''வாழுமவுலித் துழாய் மணமும் மகரக்குழைதோய் விழியருளும் மலர்ந்த பவளத் திருநகையும் மார்பிலணிந்த மணிச்சுடரும் தாழு முளரித் திருநாபித் தடத்துளடங்கு மனைத்துயிரும் சரணகமலத்துமை கேள்வன் சடையிற் புனலும் காணேனால் ஆழமுடைய கருங்கடலின் அகடு கிழியச் சுழித்தோடி அலைக்குங்குடகாவிரிநாப்பண் ஐவாயரவிற்றுயிலமுதை ஏழுபிறப்பிலுடைய வரை எழுதாப் பெரியபெருமானை எழுதவரிய பெருமானென்றெண்ணு தெழுதியிருந்தேனே'' என்பது சுவைமிக்கதொரு பாசுரம். திருமங்கையாழ்வார் கச்சியில் அட்டபுயகரத்தெம்பெருமானை மங்களாசாஸனம் செய்தருளுமிடத்து ''ஓவிநல்லார் எழுதிய தாமரையன்ன கண்ணும் ஏந்தெழிலாகமும் தோளும் வாயும் அழகிய தாமிவரார் கொல்'' என்றார். எம்பெருமானுடைய வடிவழகைக் கண்டபோது, சித்திரமெழுத வல்லவர்கள் தங்கள் மனப்படி அவித்தவித்து எழுதி முடிப்பதுண்டே அப்படியெழுதிய திருமேனியாகவே இது இருக்கவேண்டும் என்று கருதினாள் பரகால நாயகி. தெய்வ மாதை வருணிக்கின்ற ஒரு மஹாகவி ''சித்ரே நிவேச்ய பரிகல்பித ஸத்வயோகா'' என்றான். உடலைச் சித்திரத்தில் எழுதி அதில் ப்ராண ப்ரதிஷ்டை செய்ததாகச் சொன்னபடி. கம்பராமாயணத்தில் ''கோவியல் தருமமுங்கள் குலத்துதித்தோர்கட்கெல்லாம் ஓவியத்தெழுத ஒண்ணா உருவத்தாய் உடைமையன்றோ?'' என்று இராமபிரானை ஓவியத்திலும் எழுதவொண்ணாத உருவுடையவன் என்றான் வாலி. ஐயங்கார் இவ்விரண்டினும் மேம்பாடாகப் பேசின பாசுரத்தின் சுருக்கமான கருத்தாவது—அரங்கன் திருமேனியைச் சித்திரத்திலெழுதி அநுபவிப்போமென்று பாரித்த ஐயங்கார் ஒருவாறு எழுதித் தலைக்கட்டிப் பிறகு அநுதாபங்கொண்டு எழுத ஒண்ணாத உருவத்தை ஏதுக்கெழுதினேன்!' என்று உருகுகிறார். ''திருமுடியிலணிந்த திருத்துழாயை எழுதிவிட்டேனாயினும் அதன் நறுமணத்தை எழுதிற்றிலேனே!'' 'காமம் கர்ணாந்த விச்ராந்த விசாலே தஸ்ய லோசநே' என்னுமாபோலே செவியளவும் நீண்ட திருக்கண் நோக்கத்தை எழுதிவிட்டேனேயொழிய ''த்வதீக்ஷண ஸுதா ஸிந்து வீசிவிக்ஷேப

சீகரை: காருண்யமாருதாநீதை: சீதளை:'' என்று பக்தர்கள் அநுபவிக்கும் விழியருளை எழுதிற்றிலேனே! திருப்பவளத்தை எழுதினேனேயொழிய அதனின்று தோன்றும் அவ்யக்த மதுர மந்தஹாஸ விலாஸத்தை எழுதிற்றிலேனே! *குருமா மணிப்பூண் குலாவித் திகழும் திருமார்பு* என்றபடி திருமார்பில் விளங்கும் கௌஸ்துபமணியை எழுதினேனே யொழிய அதினின்று வீசும் ஒளி வெள்ளத்தை எழுதிற்றிலேனே! திருநாபிக் கமலத்தை எழுதினேனேயொழிய அதிலடங்கியுள்ள ஸகல லோகங்களையும் எழுதப் பெற்றிலேனே! திருவடிவாரத்தில் பரமசிவன் தொழுவதை எழுதினேனே யொழிய கங்காதரக் கடவுளாகிய அவனது சடையிற் புனல் வெள்ளத்தை எழுதிற்றிலேனே!' என்றிப்படி அலமருகின்றார். அவயவியை ஒருவாறு எழுதினேனாயினும் அவயவவிசேஷங்களை எழுதப்பெற்றிலேனேயென்று மனம் புண்படுகிறபடி.

## 76. ஐயங்கார் பெருமைச் சுருக்கம்

ஸ்ரீவைஷ்ணவ ஸம்ப்ரதாயத்தில் பிள்ளைப்பெருமாள் ஐயங்கார் என்று ப்ரஸித்தராய் இருந்த திவ்ய கவியான ஒருவரையே ஐயங்கார் என்று வழங்கி வருகின்றது உலகம். இராமாநுச நூற்றந்தாதி அருளிச் செய்த திருவரங்கத் தமுதனாருடைய திருக் குமாரர் இவர். திருப்பேரனார் என்பாரும் உளர். பட்டர் திருவடிகளிலே ஆச்ரயித்தவர் இவர் என்பதை இவர்தாமே தமது திருவரங்கக்கலம்பகத்தில் ''வானிட்ட கீர்த்திவளர் கூரத்தாழ்வான் மகிழவந்த, தேனிட்டதார் நம்பெருமாள் குமாரர் சிவனை அயன் தானிட்டசாபம் துடைத்தாளரங்கர் சங்காழி புயம், நானிட்டனென்றருள் பட்டர் பொற்றாள்கதி நந்தமக்கே'' என்கிற காப்புச் செய்யுளினால் நன்கு விளக்கியுள்ளார். இச் செய்யுளில் கூரத்தாழ்வார் திருக் குமாரர் என்னாதே 'கூரத்தாழ்வார் மகிழவந்த நம்பெருமாள் குமாரர்'என்று பணித்தது உற்று நோக்கத் தக்கது. பட்டர் தமது ஸ்ரீரங்கராஜஸ்தவத்தில் ''ஸ்ரீரங்கராஜ கமலாபத லாலிதத்வம்'' என்றருளிச் செய்துள்ளார். ஸ்ரீரங்க நாதனும், ஸ்ரீரங்க நாச்சியாரும் சிறு பிராயத்திலிருந்த தம்மை (பட்டரை) திருவடிகளில் இட்டுக் கொண்டு சீராட்டிப் பாலூட்டி வளர்த்ததாக இதனால் தெரிவிக்கப் படுகிறது. அது ஐயங்கார் பாசுரத்தினால் மூதலிக்கப்பட்டதாயிற்று. இல்லையேல் 'நம்பெருமாள் குமாரர், என்ன மாட்டார் அன்றோ? இப்பொழுதும் கோயிலில் பட்டர் திருமாளிகைகளில் பிரசவம் நேர்ந்தால் ஸ்ரீரங்கநாத தேவஸ்தானத்திலிருந்து பிரசவ மருந்து முதலியன அனுப்பப்பட்டு வருமது இடையறாது நடை பெற்று வருகின்றது.

## 77. ஐயன் பாழியில் ஆனை போர்க்கு உரித்தாமன்று

திருவாய்மொழியில் (1-1-5) அவரவர் தமதமது என்கிற பாசுரத்தில் அருளிச் செய்யப்படுகிற அர்த்த மென்ன வென்றால், சிலர் தேவதாந்தரங்களைப் பணிந்து பேறுபெற நினைக்கிறார்களென்றும் அவர்களுக்கு அந்த தெய்வங்கள் பேறு

தருகின்றன வென்றும் அதற்குக் காரணம் ஸர்வேச்வரன் அந்த தேவதைகளுக்கு அந்தர்யாமியாய் இருந்து சக்தி அளிப்பதுதான், என்றும் கூறப்பட்டுள்ளது. இப் பாசுரத்தை வியாக்கியானித் தருளாநின்ற நம்பிள்ளை ஈடு முப்பத்தாறுயிரப் படியில் "ஐயன் பாழியில் ஆனை போர்க்கு உரித்தாமன்றுயிற்று, அல்லோ தேவதா மாத்ரங் களுக்கு பலப்ரதாந சக்தியுள்ளது" என்று இவ்வற்புதமான ஸ்ரீஸூக்தியை அருளி யுள்ளார். ஐயன்பாழியாவது பிடாரிகோயில். ஆங்காங்கு பிடாரி கோவில்கள் உள்ள விடங்களில் சூளை போட்டெடுத்த யானையும் குதிரையும் நின்று கொண் டிருக்கும். அவை ஒரு யுத்தத்திற்குப் புறப்பட்டுப்போகச் சக்தியற்றவை. உயிருள்ள யானைகள் குதிரைகள் போலக் காரியம் செய்ய இயலாதவை. அப்படியேதான் தேவ தாந்தரங்களும் எம்பெருமானுடைய சக்தி ஆவேசம் பெறுதவளவில் ஒன்றும் செய்யமாட்டாதவை என்பது அற்புதமான த்ருஷ்டாந்தம் கொண்டு அறி விக்கப்பட்டதாயிற்று. (இடையில் ஓர் அறிவிப்பு) இதை நாம் எழுதிக்கொண் டிருந்த ஸமயத்தில் ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சன பத்திரிகை (செப்டம்பர் மாதத்தியது) கிடைத்தது. வார இதழ் ஒன்றில் வெளிவந்த ஒரு துர்வாதத்தின் அநுவாதத்தை அதில் கேட்டோம். உலகிலுள்ள பலபல ஸாத்விக மஹாஜனங்களின் உள்ளம் கொதிப்படையுமே என்று வருந்தி "ஐக்யவாத நிராஸம்" என்கிற அடுத்த கட்டுரையை இதோ எழுதுகிறோம்.

78. ஐக்யவாதநிராஸம். மதிவிகற்பால் பிணங்கும் சமயங்கள் பலபல வன்றோ? அங்ஙனம் வெவ்வேறு பட்டுள்ள மதங்களில் ஐக்யவாதம் ஸாம்ய வாதம் உத்தீர்ண வாதம் இத்யாதியான சில வாதங்கள் நெடுநாளாகவே தோன்றி யுள்ளன. இவற்றை நம் முன்னோர்கள் கிள்ளிக் களைந்தருளினர். ஆனாலும் அவை அடிக்கடி தோன்றிக் கொண்டேயிருப்பது இயல்பு. தைத்திரீய ஸம்ஹிதையில் இரண்டாவது காண்டம் ஐந்தாவது ப்ரச்நம் "விச்வரூபோ வை" என்று தொடங் குவது. அதில் தேவேந்திரன் தான் பெற்ற ப்ரஹ்மஹத்யா பாபத்தைப் போக்கிக் கொள்ள வநஸ்பதிகளை (வ்ருக்ஷங்களை) வேண்டினபோது அவை கேட்டவரத்தை வேதமோதுகின்றது. "தே அப்ருவந் வரம் வ்ருணாமஹை வ்ருக்ணாத் பராபவிஷ் யந்தோ மந்யாமஹே ததோ மா பராபூம" என்று. இதன் பொருளாவது:—"வ்ரு க்ஷங்களாகிய நாங்கள் ஒருவரால் வெட்டப்பட்டால் மறுபடியும் முளைக்கப் பெறு மலே இருந்து வருகிறோம். இப்படியல்லாமல் வெட்ட வெட்ட மேன்மேலும் முளைக்கும்படி வரமளிக்க வேணும்" என்றபடி. உடனே தேவேந்திரன் "ஆவ்ரச் சநாத் போ பூயாம்ஸ உத்திஷ்டாத." என்று வரமளித்ததாகவும் அங்கே ஓதிற்று. (அதாவது.) வெட்டவெட்ட சதசாகமாகப் பணைக்கலாமென்றபடி. இதைப் போல மதங்களாகிற வ்ருக்ஷங்களும் வெட்டவெட்ட முளைத்துக் கொண்டே யிருக்கு மாதலால் முன்னோர்களாலும் பின்னோர்களாலும் ப்ரமாணயுக்திகளைக்கொண்டு பலவாறு கிள்ளிக் களையப்பட்ட மதங்களும் முளைத்துக்கொண்டே தானிருக்கு மென்பதில் வியப்பில்லை.

உபநிஷத்தொன்றில் "ஏகோ ஹ வை நாராயண ஆஸீத், ந ப்ரஹ்மா நேசாந: நேமே த்யாவா ப்ருதிவீ" என்பதொரு வாக்கியம். இதை ஸ்ரீபாஷ்யகாரர் ஸமந்வயாதிகரண பாஷ்யம் அந்தரதிகரணபாஷ்யம் முதலான விடங்களில் உதாஹரித்துள்ளார். 'ஏகமேவாத்விதீயம்' இத்யாதி ச்ருதிகளிற் காட்டிலும் மேலெடுத்த ச்ருதி வாக்யத்திற்கு நெடுவாசியுண்டு. அந்த ச்ருதியில் தேவதாந்தரங்களின் பெயரை யெடுத்து நிஷேதித்தமை யில்லை. இந்த ச்ருதியிலோ வென்னில் 'ப்ரஹ்மா ந ஈசாந: ந இமே த்யாவாப்ருதிவீ ந' என்று பெயரை யெடுத்துக் கழித்துள்ளமை ஸ்பஷ்டம். 'ஈசாந:' என்னப்பட்ட வ்யக்தி இன்னாரென்பதை 'சம்புரீச: பசுபதி: சிவ: சூலீ மஹேச்வர:, ஈச்வர: சர்வ:ஈசாந:" என்கிற அமரகோசங்கொண்டு அறியலாம். இந்த ச்ருதி வாக்யத்தின் முன்னே ஸாம்ய வாதமோ ஐக்யவாதமோ உத்தீர்ண வாதமோ எதுவும் தலைகாட்ட இடமில்லை என்று எளிதில் உணரலாம். இவற்றுள் ஸாம்ய வாதமாவது இரு வஸ்துக்களின் பேதத்தை ஒப்புக்கொண்டு அவற்றுள் ஏற்றத் தாழ்வு ஏற்றம் (அல்லது) தாழ்வு இல்லாமையைச் சொல்லுவதாம். ஐக்யவாதமாவது அவ்வஸ்துக்களுக்கு பேதத்தையே ஒப்புக்கொள்ளாமையாகும். உத்தீர்ண வாதமாவது ஸாம்யமும் ஐக்யமுமன்றிக்கே இவற்றுக்கு மேற்பட்டதொரு தத்வமுண்டென்கை. இந்த வாதங்களெல்லாம் ப்ரமாணயுக்தி சத சரங்களாலே கிள்ளிக் களையப்பட்டும் இடையிடையே தலைகாட்டி வருவது வியப்பன்றென்பது புநருக்தியாகாது. பரம ஸாத்விகர்கள் இத்தகைய துர்வாதங்களைப் பத்ரிகைகளில் வாசிக்க ப்ராப்தமாகும்போது முன்னே யெடுத்துக்காட்டிய 'ஏகோ ஹ வை நாராயண ஆஸீத் ந ப்ரஹ்மா நேசாந: நேமே த்யாவாப்ருதிவீ' என்கிற ச்ருதி வாக்யத்தையும் 'ஸ்வாபாவிகாநவதிகாதிசயேசித்ருத்வம் நாராயண த்வயி ந ம்ருஷ்யதி வைதிக: க:, ப்ரஹ்மா சிவ: சதமக: பரமஸ்வராடிதி ஏதேபி யஸ்ய மஹிமார்ணவ விப்ருஷஸ்தே. 'க: ஸ்ரீ:ச்ரிய: பரம ஸத்வ ஸமாச்ரய: க: க: புண்டரீக நயந: புருஷோத்தம: க: .........வேதாபஹார குருபாதக.........த்வாம் சீல ரூப சரிதை: பரம ப்ரக்ருஷ்ட ஸத்வேந ஸாத்விகதயா ப்ரபலைச் ச சாஸ்த்ரை:, ப்ரக்க்யாததைவ பரமார்த்த விதாம் மதைச்ச நைவாஸுர ப்ரக்ருதய: ப்ரபவந்தி போத்தும்" இத்யாதிகளான ஆளவந்தார் ஸ்ரீஸூக்திகளையும் அநுஸந்தித்துத் தெளிவு பெறுவராக. பரம வைதிகரான ஆதிசங்கர பகவத்பாதரும் இக்காலத்தில் தோன்றும் துர்வாதங்களைக் கிள்ளிக்களைந்தவரேயாவர். அவருடைய நூல்களில் அத்வைதவாதம் மறுக்கத்தக்கதாகக் காண்பதேயொழிய ஸ்ரீமந் நாராயணபசாரம் என்கிற படுகுழி ஓரிடத்திலும் காண்பதன்று. அவருடைய கீதாபாஷ்யமும் ஸஹஸ்ரநாம பாஷ்யமும் பேர்க்கவும் பேராத ப்ரஹ்மாஸ்த்ரங்கள்.

## ஆதிசங்கராசார்யருடைய அந்தரங்க சுத்தி

பகவத்பாதர் இயற்றிய விஷ்ணு ஸஹஸ்ரநாம பாஷ்யத்தில் தேவதாந்தரங்களுக்கு அவரத்வத்தை நிலை நாட்டி ஸ்ரீமந்நாராயணனுக்குப் பரத்வம் ஸ்தாபித்திருப்பது கதிரா யிரமிரவி கலந்தெறித்தா லொப்ப விளங்கா நின்றது. விஷ்ணு ஸஹஸ்ர நாமத்திற்கு பாஷ்யம் செய்த பகவத்பாதர் சிவ ஸஹஸ்ர நாமத்திற்கு ஏன் பாஷ்யம் செய்யவில்லை என்று வினவினால், ''அப்போது சிவஸஹஸ்ரநாமஸ்துதியில்லை; பிற்பட்ட காலத்தில்தான் அஃது உண்டாயிற்று; ஆதலால்தான் அதற்கு பாஷ்யம் செய்ய ப்ரஸக்தி யுண்டாகவில்லை'' என்கிறார்கள். அது நிற்க. பாஞ்சராத்ராகம ப்ராமாண்யாதிகரணத்தில், *உத்பத்த் யஸம்பவாத்* என்கிற ஸூத்ர பாஷ்யத்தில் ''தத்ர பாகவதா மந்யந்தே'' என்று தொடங்கி பாஞ்சராத்ராகம ப்ரமேயங்களான விஷயங்கள் மூன்றென்று ஸங்க்ரஹித்து, அவற்றுள் இரண்டு விஷயங்களில் தம்முடைய ஸம்மதியைக் காட்டி, மூன்றாவதான ஒரு விஷயத்தில் மட்டும் வைமத்யம் காட்டியுள்ளார் பகவத்பாதர். தமக்கு ஸம்மதமாகக் காட்டின இரண்டு விஷயங்கள் இவை:— (இங்கு அவருடைய பங்க்திகளையே உதாஹரிப்போம்) 'தத்ர யத்தாவதுச்யதே யோஸௌ நாராயண: ப்ரஸித்த: பரமாத்மா ஸர்வாத்மா இதி, தத் ந நிராக்ரியதே. யதபி தஸ்ய பகவத: அபிகமநாதிலக்ஷணமாராதநம் அஜஸ்ரமநந்யசித்ததயா அபிப்ரேயதே, ததபி ந ப்ரதிஷித்யதே! ச்ருதி ஸ்ம்ருத்யோரீச்வரப்ரணிதாநஸ்ய ப்ரஸித்தத் வாத்'' என்பன அவருடைய பாஷ்ய பங்க்திகள் இவற்றால், ஸ்ரீமந்நாராயணனுக்கே பாரம்ய ப்ரதிஷ்டாபநத்தில் பகவத் பாதர் ஊக்கமுடையவரென்பது மறக்கத்தக்கதன்று ஈச்வராதி ஸாமாந்ய சப்தங்களுள்ள விடங்களில் வாஸுதேவ நாராயணாதி விசேஷ சப்தங் களையிட்டு வியாக்கியானம் செய்யத் தொடங்கினவரும் பகவத்பாதரேயாவர். மேலே யெடுத்துக் காட்டின *உத்பத்த்யஸம்பவாதிகரண பாஷ்ய பங்க்தியில் பகவதோ நாரா யணஸ்ய அபிகமநாதிலக்ஷணமாராதநமஜஸ்ரம்'' என்ற விடத்தில் ''[அநந்யசித்தத்யா]'' என்றெழுதப்பட்டுள்ளதில் இதாநீந்தநர்கள் கண்மூடிகளாயிருக்கின்றனர். ருத்ராதிகளான அந்யர்களிடத்திலும் சித்தத்தைவைத்துச் செய்யப்படுகிற ஸ்ரீமந்நாராயணாராதநம் அநந்ய சித்தக்ருதமாக எப்படி யாகுமென்பதை அவர்கள் ஆலோசிக்க மாட்டிற்றிலர் நாராயண னைப் பரிவாரத்தோடுங்கூட ஆராதிப்பதும் சிந்திப்பதும் செய்தால் இது அநந்யசித்தத்வத் திற்கு விரோதமாகுமோ! என்று அவர்கள் கேட்கக்கூடும். ருத்ராதிகளிடத்தில் ஸ்ரீமந் நாராயண பரிவாரத்வ ப்ரதிபத்தி குறையற்றதாகில் குசலமேயாகுமிவர்களுக்கு.

## ஆதிசங்கராசார்யருடைய கீதாபாஷ்ய ஸூக்திவிசேஷங்கள்

சங்கர பகவத்பாதர் விஷ்ணு பக்தரா? சிவ பக்தரா? என்று விசாரித்து நிர்ணயிக்க வேண்டுவது அவசியமானது ச்ருதீதிஹாஸ புராணாதி ஸமஸ்தப்ரமாண விசேஷங்களுள் பகவத்கீதையே முன்னணியில் நிற்கின்றதென்பதில் யார்க்கும் விவாத மிராது எம்பெரு மான்தானே சோதிவாய் திறந்து பணித்ததென்கிற மிக்க சிறப்பன்றோ இதற்குள்ளது! அப் பெருமான் ஸ்ரீமந்நாராயணனே யென்றும் ஸ்ரீமஹாவிஷ்ணுவின் பரத்வமும் தேவதாந்தரங் களின் அவரத்வமும் அடிக்கடி விளக்கப்பட்டுள்ளது. (10-8) அஹம் ஸர்வஸ்ய ப்ரபவோ மத்தஸ்ஸர்வம் ப்ரவர்த்ததே'' என்ற விடத்தில் சங்கர பாஷ்யபங்க்தி இது காணீர்:—அஹம் பரம் ப்ரஹ்ம வாஸுதேவாக்க்யம், ஸர்வஸ்ய ஜகத: ப்ரபவ:—உத்பத்தி:;மத்த ஏவ

ஸ்திதிநாசக்ரியாபலோபபோக லக்ஷணம் விக்ரியாரூபம் ஸர்வம் ஜகத் ப்ரவர்த்ததே'' இத்யாதி. மூலத்தில் நாராயணபதமோ விஷ்ணுபதமோ காணப்படாத விடங்களிலெல்லாம் நியமேந விஷ்ணு நாராயண வாஸுதேவ பதங்களை யிட்டே பாஷ்யமியற்றுகிறார் பகவத்பாதரென்பது வ்யபிசரியாத விஷயம் (9-22) அநந்யாச் சிந்தயந்தோ மாம்'' என்ற விடத்தில் ''பரம் தேவம் நாராயணம்.. பர்யுபாஸதே—தேஷாம் பரமார்த்த தர்சிநாம்'' என்று பாஷ்யமிட்டிருக்கின்ற பகவத்பாதர் பரதேவதையான நாராயணனை உபாஸிப்பவர்கள் யாவரோ அவர்களே உண்மை யறிவாளிகள் என்று காட்டினாராகிறார். ஸ்ரீமஹாவிஷ்ணுவுக்குப் போல ருத்ரனுக்கும் பாரம்யமுண்டு என்கிற வாதத்தை ஸஹிப்பவரல்லர் பகவத்பாதர். ஸ்ரீமந்நாராயண வ்யதிரிக்த தேவதைகளை பஜிப்பவர்களைப் பற்றின ப்ரஸ்தாவம் கீதையில் இல்லாமற் போகவில்லை. (7-20) *காமை ஸ்தை ஸ்தை: ஹ்ருதஜ்ஞாநா: ப்ரபத்யந்தே அந்யதேவதா:* என்று தொடங்கிச் சொல்லி வருகையில் *அந்தவத்து பலம் தேஷாம் தத்பவத்யல்பமேதஸாம்* என்று தலைக்கட்டப்பட்டுள்ளது

இந்த ச்லோகத்தின் பாஷ்யத்தின் முடிவில் பகவத்பாதர் எழுதியுள்ள வாக்கியம் பரம பக்தர்களை அவசமாகவே கண்ணீர் பெருக்க வைக்கின்றது. அவ்விடத்திலுள்ள வாக்கியமிது காணீர்: ''ஏவம் ஸமாநேபிஆயாஸே மாமேவ ந ப்ரபத்யந்தே அநந்தபலாய' அஹோ கலு கஷ்டதரம் வர்த்ததே இத்யநுக்ரோசம் தர்சயதி பகவான்* என்று. ஸ்ரீமந்நாராயணனை பஜிப்பவர்களுக்கே அநந்தாக்ஷய பலன் பெறுவதற்கு அவகாசமுள்ளதென்று அறிந்தவர்களுங்கூட க்ஷுத்ர பலன்களை விரும்பி தேவதாந்தர பஜனம் செய்கிறார்களே! என்று பகவான் தானே கண்ணீர் விட்டழுது கதறுவதாக ஸாக்ஷாத்கரித்தன்றோ பகவத்பாதர் இதை யெழுதியுள்ளார்.

அதிலேயே பதினோராமத்யாயத்தில் விச்வரூபக் காட்சி என்பது அமைந்திருப்பதானது தேவதாந்தரங்களின் அவரத்வத்தைக் கையிலங்கு நெல்லிக்கனியாகக் காட்டுவதற்கேயன்றோ? அதில் மூன்றாவது ச்லோகத்தில்:—''பகவானே! நீயே பரமேச்வரனென்பது உண்மையே; அதைக் கட்கூடாகக் காண விரும்பு மெனக்கு உன்னால் வைஷ்ணவ ரூபத்தைக் காட்டிக் கொடுக்க முடியுமா?'' என்று அர்ஜுனன் தனது கருத்தை ஸூசிப்பித்தவளவில் ''பச்யாதித்யாந் வஸூந் ருத்ராநச்விநௌ மருதஸ்ததா'' என்று தன்னுடைய திவ்ய மங்கள விக்ரஹத்தினேகதேசத்தி லொடுங்கியிருந்த ஸமஸ்த தேவர்களையும் காணுமாறு காட்டிக் கொடுத்தருளினன் ஸ்ரீமந்நாராயணன்: பிறகு அவனருளிய திவ்ய சக்ஷுஸ்ஸாலே கண்ட அர்ஜுனன் ''பச்யாமி தேவாந் தவ தேவ தேஹே'' என்று தொடங்கி ப்ரஹ்மருத்ராதி ஸகல தேவதா கணங்களையும் அத்திருமேனியில் காண்பதாகப் பேசினன் இதை இந்திரஜாலமென்று சொல்லாமையினாலே அத்வைதவாதம் அடியறுப்புண்டது; தேவதாந்தர பாரம்ய வாதமோ நெடுந்தூரத்தில் தள்ளப்பட்டொழிந்தது நாராயணனில் வேறுபட்டதொரு தேவதை அங்ஙனே விச்வரூபம் காட்டித் தன் பக்கலில் நாராயணன் நிலீநனாயிருக்கும்படியைக்காட்டிற்றுண்டோ? காட்டத்தான் முடியுமோ? *ருத்ராதித்யா வஸவோ யே ச ஸாத்யா விச்வேச்விநௌ மருதச்சோஷ்மபாச்ச, கந்தர்வ யக்ஷாஸுரஸித்தஸங்கா வீக்ஷந்தே த்வாம் விஸ்மிதாச்சைவ ஸர்வே* என்னுமிந்த ச்லோகமானது விசேஷித்து ருத்ராதிகளின் அவரத்வத்தை அறுதியிடாநின்றதாயிற்று.

## பகவத்பாத ஸூக்தி ஸாரம்

பகவத் கீதை ஆருமத்யாயத்தில் முடிவான சுலோகமிது *யோகிநாமபி ஸர்வேஷாம் மத்கதேநாந்ராத்மநா, ச்ரத்தாவாந் பஜதே யோ மாம் ஸ மே யுக்ததமோ மத:* என்பது. இங்கு சங்கர பாஷ்ய பங்க்தி வருமாறு— யோகிநாமபி ஸர்வேஷாம் —ருத்ராதி த்யான பராணும் மத்கதேன-மயி வாஸுதேவே ஸமாஹிதேன, அந்தராத்மனு-அந்த: கரணேன, ச்ரத்தாவான்-ச்ரத்ததானஸ்ஸந், பஜதே-ஸேவதே யோ மாம், ஸ மே-மம யுக்ததம:-அதிசயேந யுக்த: அபிப்ரேத:'' என்று இதற்கு விவரணம் அநபேக்ஷிதம். பக்ஷபாத மற்றவர்கள் நற்றெளிவு பெறுவர்கள்.

## சங்கராசாரியருடைய ஸஹஸ்ர நாம பாஷ்ய ஸூக்திகள்

பகவத்பாதர் ஸஹஸ்ர நாம பாஷ்யத்திலும் பல பல இதிஹாஸங்களை யெடுத்துக் காட்டி நாராயண பாரம்யத்தைத் திடப்படுத்தியுள்ளார். விஷ்ணுவின் தாழ்வையோ, தேவதாந்தரத்தின் உயர்வையோ ஓரிடத்திலும் அவர் காட்டினதில்லை. கேசவநாம பாஷ்யத்தில் *கோ ப்ரஹ்மேதி ஸமாக்க்யாத ஈசோஹம் ஸர்வதேஹிநாம், ஆவாம் தவாங்கே ஸம்பூதௌ தஸ்மாத் கேசவ நாமவாந்* என்று சொல்லிக்கொண்டே சிவபெருமான் இந்த கேசவ நாமத்தை ஸமர்ப்பித்ததாக ஹரி வம்சத்தில் சொல்லப்பட்டுள்ள இதிஹாஸத்தை உதாஹரித்துள்ளார் பகவத் பாதர் [அர்க்க:] என்னும் திருநாமத்தின் பாஷ்யத்தில் ப்ரஹ்மாதிபி: பூஜ்யதமைரபி அர்ச்சநீயத்வாத் அர்க்க: – என்ற விவரணம் காட்டினர். இங்கு ஆதி சப்தத்தால் முந்துற முன்னம் க்ரஹிக்கக்கூடியவர் பார்வதீபதியல்லவோ? ஏன்? *ஸ ப்ரஹ்மா ஸ சிவ:* என்றோதுகிற வேத புருஷன் பிரமனுக்கடுத்தபடி சிவபிரானைச் சொல்லி வைத்திருப்பது ப்ரஸித்தமன்றோ? [அமிதாசந:] என்னும் திருநாமத்தின் பாஷ்யத்திலும் ''ஸம்ஹாரஸமயே விச்வமச்நாதீதி அமிதாசந:'' என்று விவரித்தார் பகவத் பாதர். சிவபெருமான் விச்வ பஹிர்ப்பூதனல்லனே! *நளிர்மதிச் சடையனும் நான்முகக் கடவுளும்* என்கிற திருவாசிரியப் பாசுரமும் இங்கு நினைக்கத் தக்கது. —அத்தா சராசரக்ரஹணாத்* என்கிற ஸூத்ரத்தில் க்ருத்ஸ்நமான சராசரத்தையும் உண்டவனென்று நிர்ணயிக்கப்பட்ட நாராயணன் சிவபெருமானை விட்டிட்டானென்ன ப்ரஸக்தியில்லையே! உட்கொள்ளப்பட்டவர்களில் சிவபெருமானே முதல்வனென்பது பகவத்பாத ஸித்தாந்தம். *ஸர்வவாகீச்வரேச்வர:* என்கிற நாம பாஷ்யத்திலும் 'ஸர்வேஷாம் வாகீச்வராணும் ப்ரஹ்மாதீநாமபி ஈச்வர:' என்ருர் அவர்தாமே

இப்படியாக நாம் எடுத்துக்காட்டக்கூடிய சங்கர பகவத்பாத ஸூக்திகள் இரண்டு மூன்று பக்கங்களில் அடங்கக் கூடியவையல்ல 'அரியும் அரனும் ஒன்று'' என்று ப்ரசாரம் செய்யுமவர்கள் இத்தகைய ஆசார்யஸூக்திகளுக்கு நிஷ்பக்ஷபாதமாகத் தெளிவான பொருளை உணர்த்தி உலகத்தை வாழ்விக்கக் கடமைப்பட்டவர்களாவர் பிஷ்டபேஷணமும் சர்வித சர்வணமுமாக நஷ்டமாய்ப்போன வாதங்களையே மீண்டுமீண்டும் ப்ரசுரிக்கச் செய்வதில் என்ன பயனே அறியோம். ஏற்கனவே நாம் எழுதி வெளியிட்டிருக்கிற ஸ்ரீமஹாவிஷ்ணு ஸாம்ராஜ்யம் பல பாஷைகளிலும் உலகமெங்கும் பரவியுள்ளது.

# மருந்தில்லாத மஹா வ்யாதியொன்று

உலகில் பிணிகள் ஆயிரக்கணக்கில் ஏற்பட்டுள்ளன. புதிது புதிதாகவும் தோன்றி வருகின்றன. எல்லாவற்றுக்கும் மருந்துகள் கண்டுபிடிக்கப்பட்டு அவரவர்கள் சிகித்ஸை பெற்றுக் குணமடைந்து வருகிறார்கள். ஒரே ஒரு வ்யாதிக்குத்தான் இன்னும் மருந்து கண்டு பிடிக்கப்படவில்லை. அந்த வியாதி என்னவென்றால் அஸூயை என்பதொன்றே. நம் போல்வாரான மனிதரிடத்தில் தோன்றும் அஸூயையைப் பற்றிக் கவலையில்லை. ஸங்கல்ப ஸூர்யோதயத்தில் அஸூயாதேவீ சொல்லுவதாக ஒரு ச்லோகம். "மயி தத்தாவதாநாயாம் விச்வ தோஷாப ஹாரிணு, ந சக்யம் ஈச்வரேணாபி நிரவத்யேந வர்த்திதும்". இதன் பொருளாவது. "அஸூயையாகிய நான் உஷாராயிருந்தேனாகில் ஸர்வேச்வரனாலும் அவத்யஹீநனாக இருக்க முடியாது" என்பதாம். பகவத் கீதையின் முடிவில் அருமருந்தான ச்லோகம் ஒன்று கேளீர். "இதம் தே நாதபஸ்காய நாபக்தாய கதாசந, நசாசுச்ருஷவே வாச்யம் ந ச மாம் யோப்யஸூயதி" என்பது. இதில் கடைசி பாதம் வெகு ஆச்சர்யமாக அமைந்துள்ளது. எம்பெருமானிடத்தில் அஸூயை கொள்பவர்கள் பகவத்கீதை யவதரிப்பதற்கு முன்னமே தோன்றியிருந்தார்களென்பது நன்கு புலப்படுகின்றது. இவ்விடத்திற்கு பகவத் ராமாநுஜ பாஷ்யத்தை மேலே காட்டுகிறேன். சங்கர பகவத் பாதாளுடைய பாஷ்ய பங்க்தியை அவரவர்கள் எடுத்துப்பார்ப்பது. ஸ்ரீராமாநுஜ பாஷ்யத்தில் "மத்ஸ்வரூபே மதைச்வர்யே மத் குணேஷு ச குதிதேஷு யோ தோஷமாவிஷ்கரோதி, ந தஸ்மை வாச்யம்" என்று ஸாதித்து விட்டு உடனே ஸாதிப்பதாவது "அஸமாந விபக்தி நிர்தேச: தஸ்ய அத்யந்த பரிஹரணீயதா ஜ்ஞாபநாய" என்று. இதன் பொருளாவது "அதபஸ்காய ந வாச்யம்" "அபக்தாய ந வாச்யம்" "அசுச்ருஷவே ந வாச்யம்" என்றவை போல முடிவிலும் "மயி அப்யஸூயவே ந வாச்யம்" என்ன வேண்டியிருக்க விபக்தியை மாற்றி "ந ச மாம் யோப்யஸூயதி" என்று கீதாசார்யன் அருளிச் செய்ததானது விசேஷமான கருத்தையுடையதென்று காட்டினபடி. இந்த ச்லோகம் கீதாசாஸ்த்ரத்தின் உபக்ரமத்திலேயே இருந்திருக்கலாம். கீதாசார்யன் இந்த சாஸ்த்ரத்தில் இவ்வளவு அர்த்தங்களைக் கொட்டப்போவதாக முதலில் நினைத்திலன். தன்னையுமறியாமல் சொன்ன அர்த்த விசேஷங்களின் சீர்மையை அறிய அறிய "அந்தோ! இவ்வரும் பெரும் பொருள்களை வாரியிறைத்துவிட்டோமே!" என்று அநுதாபம் தோன்றி இந்த ச்லோகம் முடிவிலிட்டபடி. சங்கர பகவத் பாதாள் கூறியதாகக் கீழே நாம் எடுத்துக் காட்டியுள்ள அர்த்த விசேஷங்கள் மருந்தில்லாத மஹா வ்யாதியான ஸ்ரீமந்நாராயண-அஸூயா ரோகத்தை உடையவர்கட்குச் சிறிதும் ருசிக்கமாட்டா.

ஸ்ரீ வைஷ்ணவேதரர்களுக்கு பாஞ்சராத்ராகமத்தில் பகையே யொழிய இதிஹாஸபுராணங்களில் பகையிருக்க நியாயமில்லை; இருப்பதாகக் கேள்விப்படவுமில்லை. கைசிக மாஹாத்ம்ய மென்கிற பகுதி வராஹபுராணாந்தர்கதமானது. வராஹ புராணத்தை வைதிகர்களானவர்களெல்லாம் ஆதரிப்பவர்களேயன்றோ! அதை மறுப்பவரான் ஒரு வைதிகரையும் காண்கின்றிலோம். அதில் நம்பாடுவான் பல சபதங்களைச் செய்கிறான். "வாஸுதேவம் பரித்யஜ்ய யேந்யம் தேவமுபாஸதே, தேஷாம் கதிம் ப்ரபத்யேய யத்யஹம் நாகமே புந:". "நாராயண மதாந்யைஸ்து தேவைஸ் துல்யம் கரோதி ய: தஸ்ய பாபேந லிப்யேயம் யத்யஹம் நாகமே புந:" இந்த ச்லோகங்களை எந்த வைதிகராவது வெறுக்கிறாரோ? முடிவாக ஒரே வார்த்தை. த்ரிவித பரிச்சேதங்களுள் ஒன்றான வஸ்துபரிச்சேதம் பகவானுக்கு இல்லை என்பது வேதாந்திகளின் கொள்கை. அந்த வஸ்துபரிச்சேத ராஹித்யத்தை மற்றொரு பேச்சாலே பேசும்போது ஸர்வவஸ்து ஸாமாநாதிகரண்யார்ஹத்வம் என்போம். அந்த ரீதியிலே "சம்புச்ச நாராயண: திசச்ச நாராயண:" என்னுமாபோலே சொல்லுகிறோமென்றால் தடுப்பாரில்லை.

## 79. ஒப்பிலியப்பன் ஸன்னிதி

திருக்குடந்தையருகில் திருவிண்ணகர் என்ற திவ்யதேசம் உள்ளது. இத்தலத்திற்கு நம்மாழ்வார் ஒரு பதிகமும் திருமங்கையாழ்வார் மூன்று பதிகங்களும் பாடியுள்ளார்கள். இத்தலத்தை 'உப்பிலியப்பன் ஸன்னிதி' என்று வழங்கிவருகிறார்கள். இங்கு ஸன்னிதியில் உப்பின் சம்பந்தமே கிடையாது. எந்தப்பண்டமும் உப்பு இல்லாமலே தளிகையாகும். இத்தலத்து எம்பெருமான் விவாஹம் செய்து கொள்ள விரும்பி மானிட வேடம் பூண்டு பெண்படைத்த ஒரு வைணவர் திருமாளிகையிற் சென்று "உம்முடைய கன்னிகையை எனக்குத் தாரைவார்த்துத்தர வேணும்" என்று வேண்டினார். அதற்கு அவர் "என் பெண்ணுக்கு உப்பு போட்டுக் கூட தளிகை பண்ணத் தெரியாதே" என்ன "எனக்கு உப்பில்லாத பிரசாதம் தான் ருசிக்கும்" என்று சொல்லி அப்பெண்ணை மணம் புணர்ந்து கொண்டு வந்துவிட்டார். அதற்காகவே உப்பில்லாத ப்ரஸாதங்களை அமுது செய்து வருகிறார்.—இது புராண வரலாறு. ஆழ்வார்கள் பாசுரத்தின்படி உப்பிலியப்பன் அன்று 'ஒப்பிலி அப்பன்' என்றே. நம்மாழ்வார் *நல்குரவும் செல்வும் என்ற பதிகத்தில் ஒன்பதாம் பாட்டில் "தன்னொப்பாரில்லப்பன் தந்தனன் தனதாள்நிழலே" என்றருளிச்செய்தார். திருமங்கையாழ்வாரும் திருக்கண்ணபுரப்பதிகத்தில் சௌரிப் பெருமாளைத் திருவிண்ணகர்ப் பெருமாளாக அனுபவித்துப் பேசும் பாசுரத்தில் "ஒருவரையும் நின்னொப்பார் ஒப்பிலா வென்னப்பா வென்கின்றாளால்" என்றருளிச் செய்தார். தன்னோடொத்த தெய்வம் இல்லாதவர் என்றபடி. இத்தலத்திற்குத் திலதமாக விளங்குமவரும் விவேகி வித்வத் ஸார்வ பௌமருமான ஸ்ரீமதுபயவே. நவநீதம் ஸ்ரீராம தேசிகாசார்யர் நம்மோடு நட்பு கொண்ட நாள் முதலாக 'ஒப்பிலியப்பன் ஸன்னிதி' யென்றே எழுதியும் பதிப்பித்தும் வருகிறார்.

## 80. ஓ ஓ உலகினதியல்வே!

நம்மாழ்வார் அருளிய திருவாசிரியத்தில் ஆறுவது பாட்டின் முதலடி இது. ஸம்ஸாரிகளாயுள்வ நமக்குப் பொறுக்க முடியாத துக்கம் உண்டானால் ஐயோ! ஐயோ!" என்று கதறுகிறோம். ஆழ்வாரும் ஒரு துக்கத்திற்காக ஓ! ஓ!! என்று கதறுகிறார். ஆழ்வார்க்கு என்ன துக்கம் என்னில் இப்பாட்டை முழுதும் கேட்டால் அது தெரியவரும். ஓ ஓ உலகினதியல்வே, ஈன்றோளிருக்க மணைநீராட்டி படைத்திடந் துண்டுமிழ்ந்தளந்து தேர்ந்துலகளிக்கும் முதற் பெருங்கடவுள் நிற்ப புடைப்பல தானறி தெய்வம் பேணுதல் தனாது புல்லறி வாண்மை பொருந்தக் காட்டி கொல்வன முதலா அல்லன முயலும் இனைய செய்கை இன்பு துன்பளி தொன்மாமாயப் பிறவியுள் நீங்கா பன்மாமாயத் தழுந்துமா நளிர்ந்தே" என்பது திருவாசிரியத்தில் ஆறும் பாசுரம். (இப்பாட்டின் சுருக்கமான கருத்து) "ஸகலவிதத்திலும் மஹோபகாரகனை ஸ்ரீமன் நாராயணன் இருக்க அவனைவிட்டு க்ஷுத்ர தெய்வங்களைப் பணிவதே! ஒரு திருத்துழாயினால் திருப்தியடையும் எம்பெருமானைப் போலன்றிக்கே 'ஆடு பலிகொடு' 'கோழி பலி கொடு' என்கிற தெய்வங்களைப் பணிவதே! பணிந்து பெறும் பேறும் அற்பமாயிரா நின்றதே! இவையென்ன உலகியற்கை!" என்று வருந்துகிறார் ஆழ்வார். திருச்சந்த விருத்தத்தில் "காணிலுமுருப் பொலார் செவிக்கினாத கீர்த்தியார் பேணிலும் வரந்தர மிடுக்கிலாத தேவரை ஆண மென்றடைந்து வாழும் ஆதர்காளெம்மாதி பால் பேணி நும் பிறப்பெனும் பிணக்கறுக்க கிற்றிரே" என்கிற பாசுரத்தையும் இங்கே கூட்டிக் கொள்வது. திருமங்கையாழ்வாருடைய பெரிய திருமொழியில் (11-6) *மைந்நின்ற கருங்கடல் வாயுலகின்றி* என்று தொடங்கும் பதிகம் இத்திரு வாசிரியப் பாசுரத்தை விவரித்ததாகும்.

## 81. ஓதுவாய்மையும் உவனியப்பிறப்பும்

பெரியதிருமொழியில் (5-8-7) உஜ்ஜயினியில் வாழ்ந்த ஸாந்தீபினி முனிவனுக்கு அருள்செய்தவாற்றைப் பேசும் பாசுரத்தின் பெரியவாச்சான்பிள்ளை வ்யாக்யானத்தில் ப்ராஸங்கிகமாக நம்பிள்ளையைப் பற்றி அருளிச் செய்த வார்த்தை காணீர். (அதாவது) ''முன்பட த்வயத்தைக் கேட்டு இதிஹாஸ புராணங்களையுமதிகரித்து பரபக்ஷப்ரதிக்ஷேபத்துக் குடலாக ந்யாய மீமாம்ஸைகளுமதிகரித்து போதுபோக்கும் அருளிச் செயலிலேயாம் நம்பிள்ளையைப் போலே அதிகரிப்பிக்க வல்லவனையிறே 'ஒருவன்' என்பது.''—என்று

## 82. ஓதமாகடலைக் கடந்தேறி

பெரிய திருமொழியில் (10-2-6) ஸ்ரீராமவிஜயத்தை அரக்கர் பேசும் பேச்சாலே தெரிவித்த பதிகத்திலுள்ள பாசுரமிது. இதில் அனுமனுடைய சரிதை முழுவதும் சுருக்கமாக ஓதப்பட்டு முடிந்தது. உலகில் ஸ்ரீராமாயண பாராயணம் செய்பவர்கள் பாராயணத் தொடக்கத்தில் அநுமனைப் பற்றிய ச்ருதிகள் பல சொல்லி வருகிறார்கள். அவற்றுள் ''உல்லங்க்ய ஸிந்தோஸ் ஸலிலம் ஸலீலம் யச் சோகவஹ்நிம் ஜநகாத்மஜாயா: ஆதாய தேநைவ ததாஹ லங்காம் நமாமி தம் ப்ராஞ்ஜலிராஞ்ஜநேயம்'' என்பதொடு ச்லோகம். அது தன்னில் கடலைக் கடந்ததும் இலங்கையை யெரித்ததுமாகிய இரண்டு சரிதையே சொல்லப்பட்டது. இப்பாசுரம் கேளீர். ''ஓதமாகடலைக் கடந்தேறி உயர்கொள்மாக் கடிகாவையிறுத்துக் காதல் மக்களும் சுற்றமும் கொன்று கடியிலங்கை மலங்க வெரித்துத் தூதுவந்த குரங்குக்கே உங்கள் தோன்றல்தேவியை விட்டுக் கொடாதே ஆதர் நின்று படுகின்றதந்தோ அஞ்சினோம் தடம் பொங்கத்தம் பொங்கோ''.

## 83. "ஓவாதுரைக்கு முரையுண்டே"

பொய்கையாழ்வாருடைய திருவந்தாதியில் (95) உள்ள பாசுரமிது. ''நாவாயிலுண்டே நமோ நாரணவென்று ஓவாதுரைக்கு முரையுண்டே மூவாத மாக்கதிக்கண் செல்லும் வகையுண்டே என்னொருவர் தீக்கதிக்கண் செல்லும் திறம்'' என்பது பாசுரம். ஸஹஸ்ராக்ஷரீமாலா மந்த்ரத்தைச் சொல்லவேணுமானால் இடையில் மூச்சு விடவும் முடியாதே நெடும்பாடுபட்டு, ஓய்ந்து ஓய்ந்து சொல்லவேண்டிய அருமையுண்டு; திருவஷ்டாக்ஷரம் அப்படியன்று. இடையில் ஓய்வை அபேக்ஷியாமல் ஒரு காலே சொல்லி இளைப்பாறலாம் படியான மந்த்ரமிது. இவ்வளவு சுலபமான மந்த்ரம் கைப்பட்டிருக்கவும் அந்தோ சிலர் இழக்கிறார்களே! என்ன கொடுமை! என்று உருகுகிறார் ஆழ்வார்.

## 84. ஔவையார் வியந்துகந்த வார்த்தையொன்று

ஔவையார் காலால்நடந்து தலயாத்திரை செய்கிறாள். சீர்காழிக்கருகே நாவல் தோப்பில் புகுந்துபோகின்றாள். அங்குள்ள பயல்கள் மரத்தின் மீதேறி நாவற்பழங்கள் பறித்துத் தின்பதைக் கண்ட ஔவையார் 'பயல்களே! எனக்குப்பசியும் தாகமுமாக இருக்குறது. கொஞ்சம் பழங்கள் பறித்துப் போடுங்கள்' என்றாள். அதுகேட்ட பயல்கள் 'பாட்டி! சூடானபழம் வேண்டுமா? குளிர்ச்சியான பழம் வேணுமா' என்ன; ஔவையார் 'உங்களுக்குக் கொழுப்பா, என்னிடமா நீங்கள் பரிகாசம் வைத்துக் கொள்வது?' என்றாள். உடனே பயல்கள் நன்றாக அளிந்திருந்த பழங்களை க்குலுக்கினார்கள். அவை மண்ணில் வீழ்ந்தபடியினாலே ஔவையார் மண்பற்றைக் கழிப்பதற்காக ஊதினாள். ''பாட்டி! சுடுகிறதல்லவா? நன்றாக ஊதும்'' என்று பயல்கள் சொல்லி ஔவையாருக்கு பயல்களின் வார்த்தையில் மிக்க வியப்பு உண்டாயிற்று. அளிந்தபழம் வேணுமா என்பதற்குப் பரியாயமாக சூடான பழம் வேணுமா என்று கேட்டதாக அறிந்து கொண்டாள். பயல்களுக்கு ஆசிகூறிச் சென்றாள்.